உ

சிவ சிவ

# சிதம்பரம்

Chidambaram

மூர்த்திதலந் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே

—தாயுமானவர்



மகாகும்பாபிஷேக வெளியீடு



மன்மத ஆண்டு ஆனித் திங்கள் 23-ஆம் நாள்

7—7—1955

ஸ்ரீ காசிமடம் :: திருப்பனந்தாள்

# திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடுகள்

---

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | 0 | 1 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | 6 | 0 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | 3 | 0 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் | 2 | 8 |
| 5 | திருநாவுக்கரசர் தேவாரம் | 1 | 0 |
| 6 | சுந்தரர் தேவாரம் | 1 | 0 |
| 7 | திருவாசகம் | 0 | 6 |
| 8 | திருக்கோவையார்—பேராசிரியர் உரை | 2 | 0 |
| 9 | ஒன்பதாம் திருமுறை—திருவிசைப்பா திருப்பல்லாண்டு | 0 | 9 |
| 10 | திருமந்திரம் | 1 | 8 |
| 11 | பதினோராந் திருமுறை | 1 | 4 |
| 12 | அம்மையார்—அற்புதத் திருவந்தாதி | 0 | 4 |
| 13 | திருக்கைலாய ஞானவுலா | 0 | 8 |
| 14 | பெரியபுராணம் | 2 | 8 |
| 15 | பெரியபுராணம்—வசனம் | 2 | 0 |
| 16 | அகத்தியர் தேவாரத் திரட்டு—குறிப்புரை | 0 | 6 |
| 17 | திருவிளையாடற்புராணம் | 3 | 0 |
| 18 | திருவிளையாடற்புராணம்—வசனம் (அச்சில்) | | |
| 19 | தாயுமான சுவாமிகள் பாடல் | 1 | 4 |
| 20 | கந்தபுராணச் சுருக்கம் | 1 | 12 |
| 21 | கந்தபுராணம்— முதல் மூன்று காண்டங்கள் ஆராய்ச்சிக் குறிப்புடன் | 2 | 12 |
| 22 | ௸ யுத்த காண்டம், தேவ காண்டம் | 1 | 12 |
| 23 | ௸ தக்ஷ காண்டம் குறிப்புரை | 1 | 8 |
| 24 | கந்தபுராணம்—வசனம் | 2 | 8 |
| 25 | கந்தர் அலங்காரம் குறிப்புரை | 0 | 4 |
| 23 | கந்தர் அநுபூதி ௸ | 0 | 2 |
| 27 | கந்தர் கலிவெண்பா—ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | 0 | 6 |

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து இலவச வெளியீடு



உ
சிவ சிவ
செந்திலாண்டவன் துணை

# சிதம்பரம்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ**
**காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்**
அவர்கள் திருவுளப்பாங்கின்படி

ஸ்ரீ காசிமடத்து இளவரசு
**ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**
அவர்களால் வெளியிடப்பெற்றது



மன்மத ஆண்டு ஆனித் திங்கள் 23-ஆம் நாள்

1955

ஸ்ரீ காசிமடம் :: திருப்பனந்தாள்

முதற் பதிப்பு 1954.
இரண்டாம் பதிப்பு 1955.

உ
சிவ சிவ

# முத்தித்தலம்

---

**தில்லைவனம்** காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம்—நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் கா(டு)அருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும்.

—சிவபோகசாரம்

## மூர்த்திச் சிறப்பு

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன்(று) இறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.

பொன்செய் மன்றில்வாழ்
கொன்செய் கோலத்தான்
மின்செய் தாள்தொழார்
என்செய் கிற்பரே?

—சிதம்பரச் செய்யுட் கோவை.

இம்பீரியல் அச்சகம், பெரியகம்மாளத்தெரு, திருச்சிராப்பள்ளி—55.

சிவ சிவ

# முன்னுரை

**தென்றில்லை மன்றினுள் ஆடி போற்றி!**
**இன்றெனக்கு ஆரமுது ஆனாய் போற்றி!**

—திருவாசகம்

**சோழ**வளநாட்டிலே பஞ்சபூதத் தலங்களுள் ஒன்றாக விளங்குவதும், சைவ சமயாசாரியர் நால்வராலும் பிறராலும் புகழ்ந்து போற்றப்பெறுவதும், பூலோக கயிலாயம் எனச் சிறப்பித்துக் கூறப்பெறுவதும், ஏனைய சிவத் தலங்களாகிய கோயில்கள் எல்லாவற்றிற்கும் தலையாய சிறப்புப்பற்றி அடைமொழியின்றிக் **கோயில்** என வழங்கப்பெறுவதும், மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற மூன்றால் பெரும் புகழ்கொண்டு விளங்குவதும், தரிசிக்க முத்தி அளிப்பதுமாகிய திருத்தலம் தில்லை மூதூர் என்னும் **சிதம்பரம்** ஆகும்.

இத்தகைய பெருஞ் சிறப்பியல்புகள் யாவும் ஒருங்கே திகழ்ந்துள்ள சிதம்பரம் என்னும் தலத்தின் பெருமையினையும் கோயில் தேவாரம் முதலியவற்றையும் சைவ சமய மக்கள் யாவரும் நன்குணர்ந்து பயன்பெறவேண்டும் என்ற உயரிய அருள்நோக்கம் கொண்டுள்ள எங்கள் மாபெருந் தலைவர் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் அதிபர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களின் திருவுளப் பாங்கின்படி **சிதம்பரம் மகா கும்பாபிஷேக நினைவு மலராக** மன்மத ஆண்டு ஆனித் திங்கள் 23-ஆம் நாளாகிய இன்று **சிதம்பரம்** என்ற இச்சிறு நூல் **திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் இலவச வெளியீடாக** வெளிவருகிறது.

இவ்வெளியீட்டில் சிதம்பரத் தல வரலாற்றுச் சுருக்கமும், மூவர் தேவாரப் பாடல்களும், நித்திய பாராயணத்திற்கு

அனுகூலமாகத் திருவாசகம் - சிவபுராணமும், திருப்பல்லாண்டும், தில்லைமூதூரில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் நிறுவியுள்ள பேரறக் கட்டளைகளும் பிறவும் இடம்பெற்றுத் திகழ்கின்றன.

இச்சிறு வெளியீட்டைச் சிறந்த முறையில் அமைத்துத் தந்த திருச்சி **திரு. வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்** அவர்கட்கும், அச்சுப் பிரதிகளை ஒப்புநோக்குதல் முதலிய பணிகளைப் புரிந்த அன்பர்களுக்கும் செந்திலாண்டவன் திருவருள் என்றும் முன்னின்று துணைசெய்வதாக.

இச்சீரிய சிவப் பணியினை அடியேற்கு அருளிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள்** அவர்களின் பெருங்கருணைத் திறத்தினையும், ஆட்கொள்ளும் பொன்னம்பலவன் திருவருளையும் உளத்திற்கொண்டு, ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பொன்னார் திருவடிக் கமலங்களை என்றும் மன மொழி மெய்களால் வந்தித்து வழிபடுகின்றேன்.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
7—7—'55

**மகாலிங்கத் தம்பிரான்,**

இளவரசு.

உ

சிவ சிவ

# திருச்சிற்றம்பலம்

தற்பரமாய்ப் பராபரமாய்த்
தாவிலநு பூதியதாய்
அற்புதமாய் ஆரமுதாய்
ஆனந்த நிலையவொளிப்
பொற்பினதாய்ப் பிரிவிலதாய்ப்
பொருளாகி அருளாகுஞ்
சிற்பரமாம் அம்பரமாம்
**திருச்சிற்றம் பலம்போற்றி !**

—**கோயிற்புராணம்.**



தென்றில்லை மன்றினுள் ஆடி போற்றி!

உ

சிவ சிவ

செந்திலாண்டவன் துணை

# சிதம்பரம்

## தல வரலாறு

---

### ஸ்ரீ நடராசப்பெருமான் துதி

கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி! போற்றி!

—பெரியபுராணம்

**தல விசேடம்**

சிவபெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள் எல்லாவற்றுள்ளும் முதன்மையாக வைத்துக் கூறப்பெறும் **கோயில்** என்னும் [1]**சிதம்பரம்** மிகத்தொன்மையும் தெய்வீகத் தன்மையும் பொருந்தியது. இஃது உலகமாகிய விராட்புருடனுக்கு இருதய தாமரையாகத் திகழ்கின்றது. பிறந்தாலும் இறந்தாலும் தரிசித்தாலும் முத்தி சித்திக்கும் தலமாக விளங்கும் பெருமை வாய்ந்தது; **மகா சிவலோகம், பூலோக கயிலாயம், பொன்னம்பலம், சிற்றம்பலம், புலியூர், பொற்**

---

1. பிரமாண்டம் என்னும் பிரமபுரத்தில் 'புண்டரீக வீடு' என்னும் தில்லைவனத்தில், ஆகாசம் என்னும் பராசத்தியாகிய திருச்சிற்றம்பலத்தில் அதிருக்கும சித்தாகப் பரமசிவம் நிருத்தம் செய்கின்றார். இங்கு ஆகாசம் (அம்பரம்) சடம் அன்று; சித்து ஆகும். ஆதலால், சிதாகாயவடிவே (ஞானகாயவடிவே) சிதம்பரம் (சித் + அம்பரம் - சிதம்பரம்) எனப்படும். தில்லை - ஒருவகை மரம். பிரமாண்டமாகிய சரீரத்திலே இடைகலைநாடி இலங்கையிலும், பிங்கலைநாடி இமயமலையிலும், சுழுமுனைநாடி தில்லைவனத்திலும் ஓடுகின்றன. இச்சுழுமுனை நாடியில்தான் என்றும் இறைவன் ஆனந்தத் தாண்டவம் புரிகின்றார்; அதனால் இத்தலம் மிகமிகச் சிறந்ததோடு அல்லாமல் எல்லாச் சிவத்தலங்களுள்ளும் முதன்மை வாய்ந்ததுவுமாகும்.

புலியூர், பெரும்பற்றப்புலியூர், தில்லைவனம், சிதாகாச க்ஷேத்திரம் முதலான பல திருப்பெயர்களைக் கொண்டு மிளிர்வது.

**ஐந்து திருச்சபை**

இத்தில்லைத் தலத்துள் நடுநாயகமாக விளங்குவது கூத்தப்பெருமான் திருநடனக்கோலம் கொண்டெழுந்தருளிய திருக்கோயிலாகும். இங்கு ஸ்ரீ நடராஜப் பெருமான் எழுந்தருளிய சிற்றம்பலம் என்னும் **சிற்சபையும்**, கூத்தப்பெருமான் திருமஞ்சனங் கொண்டருளும் **கனகசபையும்**, கொடிமரத்தின் தென்பால் ஊர்த்துவத்தாண்டவமூர்த்தி எழுந்தருளியிருக்கும் **நிருத்தசபையும்**, சோமாஸ்கந்தர் முதலிய உற்சவமூர்த்திகள் எழுந்தருளியிருக்கும் பேரம்பலம் என்னும் **தேவசபையும்**, சபாநாயகர் ஆனி, மார்கழித் திருவிழாக்களின் முடிவில் எழுந்தருளியிருந்து அபிடேகங்கொண்டு தரிசனங் கொடுத்தருளும் **இராசசபையும்** (ஆயிரக்கால் மண்டபமும்) ஆகிய **ஐந்து திருச்சபைகள்** உள்ளன. இவற்றுள் பொற்சபை [1]**இரணியவர்மனும் முதலாம் பராந்தக சோழனும்**, பேரம்பலம் **அநபாய மன்னனும்** பொன்வேயப் பெற்றன என்பர்.

**தீர்த்தம்**

தில்லைத் தலத்துள் அமைந்துள்ள சிறந்த தீர்த்தம் **சிவகங்கையாகும்**. இத்தீர்த்தமேயன்றி ஞானப்பிரகாசர்குளம், புலிமடு, ஓமகுளம், வியாக்கிரபாத தீர்த்தம், அனந்த தீர்த்தம், பிரமதீர்த்தம், குய்ய தீர்த்தம் (கடற்கரையில் பாசம் அறுத்த துறை) நாகசேரிகுளம், திருப்பாற்கடல், சிவப்பிரியை, பரமானந்தகூபம் முதலான பல தீர்த்தங்கள் திகழ்கின்றன.

**மூர்த்தி**

சிற்றம்பலத்தின் கண்ணே ஸ்ரீ கூத்தப் பெருமான் ஆனந்தத் திருக்கூத்து ஆடுகின்றார். அங்கு ஸ்படிகலிங்க மூர்த்தியும், இரத்தின சபாபதியாகிய மரகத நடராஜ மூர்த்தியும் எழுந்தருளியிருக்கின்றனர். ஸ்படிகலிங்க மூர்த்தி **அழகிய சிற்றம்பலமுடையார்** என வழங்கப்பெறுகின்றார். ஸ்ரீ நடராஜப்

---

1. இரணியவர்மன் - இவன் 3-ம் சிம்மவர்மன் (கி. பி. 550-575) என்பர். இம்மூன்றும் சிம்ம வர்மனே ஐயடிகள் காடவர்கோன் என்பர்.

பெருமானின் வலதுபுறத்தில் **சிதம்பர இரகசியம்** இருக்கின்றது. அதில் மந்திரசொரூபமாகிய திருவம்பலச் சக்கரம் அமைக்கப் பெற்றுள்ளது. இங்கு ஸ்ரீ நடராஜப்பெருமான் **சகளத்** திருமேனியாகவும், இரகசியம் **நிட்களத்** திருமேனியாகவும், ஸ்படிகலிங்கமூர்த்தி **சகள நிட்களத்** திருமேனியாகவும் எழுந் தருளி இருக்கின்றதாக நூல்கள் கூறும். ஸ்ரீ நடராஜப் பெருமானின் இடதுபுறத்தே சிவகாமி அம்மையாரும், அம்மையாருக்கு இடதுபுறத்தில் சுவர்ணகால வைரவரும் காட்சி அளிக்கின்றனர்.

இங்குச் சிறப்புடைய கடவுள் ஆனந்தத் தாண்டவர்; அவருடைய திருமேனி முழுவதும் பஞ்சாட்சர வடிவம்; அவர் புரியும் திருக்கூத்து ஒரே சமயத்தில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலையும் ஆற்று வது. இதனை,

“பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பில் நானில வளாகமும்
ஏனைப் புவனமும் எண்ணீங் குயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே;
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுஉன் அமைத்தபொற் கரமே;
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவது ஆரழல் வைத்ததோர் கரமே;
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்துநின்று
ஊட்டுவ தாகும்நின் ஊன்றிய பதமே;
அடுத்தஇன் னுயிர்கட்கு அளவில் பேரின்பம்
கொடுப்பது, முதல்வ! நின் குஞ்சித பதமே”

என வரும் **சிதம்பர மும்மணிக்கோவை** அடிகளால் அறியலாம்.

பொன்னம்பலத்தின் வடபால் சுயம்பு மூர்த்தியாகிய திரு மூலட்டானேசுவரரும், பார்வதியம்மையாரும் எழுந்தருளி யுள்ளனர். இங்கு வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும் பூசித்துப் பேறுபெற்றனர். இச்சந்நிதியில்தான்

உபமன்னியு முனிவர் பால் வேண்டி அழுதிடப் பாற்கடல் பெற்ருர். இச்சந்நிதியைப் **பெரும்பற்றப் புலியூர் மூலட்டானத்தார்** என்று திருவீழிமிழலைத் திருத்தாண்டகம் கூறுகிறது.

இன்னும் கற்பக விநாயகர், முக்குறுணி விநாயகர், பாண்டிய நாயகம், சிவகாமி அம்மையார் சந்நிதி, நவலிங்கம் (திருத்தொண்டத் தொகை ஈச்சுரம்), துர்க்கை, [1]தில்லைக் கோவிந்தராசர் முதலானோரின் திருக்கோயில்கள் மிக விளக்கம் வாய்ந்தவை.

**வழிபட்ட அடியார்கள்**

இத் தலம் மூவர் தேவாரத் திருப்பதிகங்களையும் கொண்டுள்ளது; மாணிக்கவாசகராலும், திருமாளிகைத் தேவர், சேந்தனுர் முதலான திருவிசைப்பா, திருப்பல்லாண்டின் ஆசிரியர்களாலும் பாடப்பெற்றுள்ளது. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இத்தலத்துள் பல நாட்கள் தங்கியிருந்து பல பிரபந்தங்கள்[2] பாடியருளினுர்.

இத்தலத்துள் வியாக்கிரபாதர், பதஞ்சலியார், உபமன்னியு முனிவர், சிவாலய முனிவர், திருமூலர், திருநீலகண்ட நாயனுர் முதலான சிவனடியார்களும், இராசராசன் முதலான சோழ மன்னர்களும் பிற அன்பர்களும் பூசித்துப் பேறு பெற்றனர்.

இத்தகைய அருமை பெருமை வாய்ந்த தலத்தினை அன்பர்கள் கண்டு தரிசித்துப் பேறு பெறுவார்களாக!

**தீர்த்தம் என்பது சிவகங் கையே!**
**ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே!**
**மூர்த்தி அம்பலக் கூத்தன(து) உருவே!**

—சிதம்பரச் செய்யுட்கோவை

**சிவநாமமே எங்கும் நிலவுக!**

---

1. இவர் எழுந்தருளிய இடம் சித்திரகூடம் என்பர் வைணவர்.
2. சிதம்பர மும்மணிக்கோவை; சிதம்பரச் செய்யுட்கோவை; சிவகாமியம்மை இரட்டை மணிமாலை.

சிவ சிவ

செந்திலாண்டவன் துணை

# கோயில் என்னும் சிதம்பரத்

## தேவாரத் திருப்பதிகங்கள்

## திருஞானசம்பந்த சுவாமிகள்

### தேவாரம்

### பண் - குறிஞ்சி [1-ஆம் திருமுறை]

*திருச்சிற்றம்பலம்*

*கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே*
*செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய*
*முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே*
*பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.* 1

*பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்புஞ்*
*சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய*
*பிறப்பில் பெருமானைப் பின்தாழ் சடையானை*
*மறப்பி லார்கண்டீர் மையல் தீர்வாரே.* 2

*மையா ரொண்கண்ணார் மாட நெடுவீதிக்*
*கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லையுள்*
*பொய்யா மறைபாடல் புரிந்தா னுலகேத்தச்*
*செய்யா னுறைகோயில் சிற்றம் பலந்தானே.* 3

---

*1. கற்று - வேதம் முதலிய நூல்களை ஓதி. எரி - வேள்வி. கலி - பாவம். முற்றா - முதிராத. பற்றா - பற்றுக்கோடாக. பற்றா - பற்றாது*

*2. பறப்பை - வேள்விச்சாலை. பசுவேட்டு - ஆன்மபோதத்தைக் கொன்று. சிறப்பர் – சிறப்பினையுடைய தில்லைவாழந்தணர்கள். மையல்—மயக்கம்; ஆணவமயக்கம்.*

*3. மையார் - மைபூசிய. ஒண்கண்ணார் - பெண்கள். கழி - கடற் கரையின் எல்லை சூழ்ந்த. பொய்யாமறை - வேதம்.*

நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே. 4

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. 5

வருமாந் தளிர்மேனி மாதோர் பாகமாந்
திருமாந் தில்லையுட் சிற்றம் பலமேய
கருமா னுரியாடைக் கறைசேர் கண்டத்தெம்
பெருமான் கழலல்லாற் பேணா துள்ளமே. 6

அலையார் புனல்சூடி யாகத் தொருபாகம்
மலையான் மகளோடு மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையால் எயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே. 7

கூர்வாள் அரக்கன்றன் வலியைக் குறைவித்துச்
சீரா லேமல்கு சிற்றம் பலமேய
நீரார் சடையானை நித்தல் ஏத்துவார்
தீரா நோயெல்லாந் தீர்தல் திண்ணமே. 8

---

4. பேரம்பலம் - பேரம்பலச் சபை. அறை - ஒலி. ஓவா - இடைவிடாத.

5. சேண் - ஆகாயம். செல்வர் - தில்லை வாழந்தணர்கள். செல்வன் - நடராஜப்பெருமான். இறைவன் திருவடியினைத் துதிக்கும் செல்வமே மேலான செல்வம் என்க.

6. மாந்தளிர் மேனி - இஃது உடல் மென்மைக்கு உவமையாக வருவது. மாது - உமாதேவியார். திருமாந்தில்லை - திருமகளோடு கூடிய பெரிய தில்லை. கருமான் - யானை. கறை — விஷம்.

7. அலையார்புனல் - கங்காதேவி. சிலை — மேருமலையாகிய வில். தலையானார்கள் - முதன்மையாவார்கள்.

8. கூர்வாள் அரக்கன் - இராவணன். நித்தல் - நாடோறும். திண்ணம் - உறுதி.

கோணா கணையானுங் குளிர்தா மரையானுங்
காணார் கழலேத்தக் கனலாய் ஓங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே. 9

பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடும்
முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே. 10

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரபஞ்சமம் [3-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆடினாய்நறு நெய்யொடுபால் தயிர்
அந்தணர்பிரி யாதசிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடினாயருளாய் சுருங்கஎம தொல்வினையே. 1

---

9. கோண் நாகணையான் - வளைந்த நாகத்தை அணையாகக் கொண்ட திருமால். சேணார் - தேவர்கள். மாணா - மாட்சிமையில்லாத. வாளா—வீணாக.

10. பட்டைத்துவர் - மரப் பட்டையிலிருந்து எடுக்கும் காவி. படிமம் - நோன்பு. முட்டைக் கட்டுரை - அறியாமையுடன் கூடிய சொற்கள். சிட்டர் - மேலானவர். நட்டப் பெருமானை - நடனமாடும் பெருமானை.

11. காழி – சீகாழி. சீலர்கள் - ஒழுக்கம் நிறைந்தவர்களால். கோலத்தால் - அழகால்.

1. அந்தணர் - தில்லை வாழந்தணர்கள். நயந்தவன் - விரும்பியவன்; சிவன். எம - எம்முடைய.

கொட்டமேகம ழுங்குழலாளொடு
கூடினாயெரு தேறினாய்நுதற்
பட்டமேபுனைவாய் இசைபாடுவ பாரிடமா
நட்டமேநவில்வாய் மறையோர்தில்லை
நல்லவர்பிரி யாதசிற்றம்பலம்
இட்டமாவுறைவா யிவைமேவிய தென்னைகொலோ. 2

நீலத்தார்கரிய மிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடிநீறணி வார்சடையார்
சீலத்தார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழக்
கோலத்தாயரு ளாயுன காரணங் கூறுதுமே. 3

கொம்பலைத்தழ கெய்திய நுண்ணிடைக்
கோலவாண்மதி போலமுகத்திரண்
டம்பலைத்தகண் ணாள் முலைமேவிய வார்சடையான்
கம்பலைத்தெழு காமுறுகாளையர்
காதலாற்கழற் சேவடிகைதொழ
அம்பலத்துறை வான்அடியார்க் கடையாவினையே. 4

தொல்லைஆரமு துண்ணநஞ்சுண்டதோர்
தூமணிமிட றாபகுவாயதோர்
பல்லையார்தலை யிற்பலியேற்றுழல் பண்டரங்கா
தில்லையார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழ
இல்லையாம்வினை தானெரியம்மதி லெய்தவனே. 5

---

2. கொட்டம் - வாசனை. குழலாள் - உமை. நுதற்பட்டம் - நெற்றிப்பட்டம். பாரிடம் - பூதம். நட்டம் - நட்டனம்.

3. சீலத்தார் - ஒழுக்கமுள்ளவர்கள். கழற் சேவடி - வீரக்கழலையுடைய சிவந்த திருவடிகள். கோலம் - அழகு.

4. கொம்பு - பூங்கொம்பு. நுண்ணிடை - மெல்லிய இடை. அம்பு - பாணம். கம்பலை - ஓசை.

5. தொல்லை - பழமை. தூமணி - அழகிய மணி. பண்டரங்கா-பாண்டரங்கம் என்னும் கூத்தாடிய சிவனே. வினை இல்லை என்க.

ஆகந்தோயணி கொன்றையாய்அனல்
அங்கையாய்அம ரர்க்கமராஉமை
பாகந்தோய்பகவா பலியேற்றுழல் பண்டரங்கா
மாகந்தோய்பொழில் மல்குசிற்றம்பலம்
மன்னினாய்மழு வாளினாய்அழல்
நாகந்தோயரையாய் அடியாரைநண் ணாவினையே. 6

சாதியார்பளிங் கின்னொடுவெள்ளிய
சங்கவார்குழை யாய்திகழப்படும்
வேதியாவிகிர்தா விழவாரணி தில்லைதன்னுள்
ஆதியாய்க்கிட மாயசிற்றம்பலம்
அங்கையால்தொழ வல்லடியார்களை
வாதியாதகலுந் நலியாமலி தீவினையே. 7

வேயினார்பணைத் தோளியொடாடலை
வேண்டினாய்விகிர் தாஉயிர்கட்கமு
தாயினாய்இடு காட்டெரி யாடலமர்ந்தவனே
தீயினார்கணையாற் புரமூன்றெய்த
செம்மையாய்திகழ் கின்றசிற்றம்பலம்
மேயினாய்கழ லேதொழு தெய்துதும்மேலுலகே. 8

தாரினார்விரி கொன்றையாய்மதி
தாங்குநீள்சடை யாய்தலைவாநல்ல
தேரினார்மறுகில் திருவாரணி தில்லைதன்னுட்
சீரினால்வழிபா டொழியாததோர்
செம்மையாலழ காயசிற்றம்பலம்
ஏரினாலமர்ந்தா யுனசீரடி யேத்துதுமே. 9

---

6. ஆகம் - உடல். பகவா - ஐசுவரியம் முதலிய ஆறு குணங்களை யுடையவனே. மாகம் - ஆகாயம். மன்னினாய் - நிலை பெற்றாய். நண்ணா - அடையா.

7. சங்கவார் குழை - சங்கினால் ஆகிய காதணி. வேதியா - வேதங்களை அருளியவனே. விகிர்தா-மேலானவனே. விழவு-திருவிழா.

8. வேய் - மூங்கில். பணை - பருத்த. இடுகாடு - மயானம். தீயினார் - தீ பொருந்திய. எய்துதும் - அடைவோம்.

9. தார் - மாலை. திரு ஆர் அணி - சிவச்செல்வமும் அழகுடன் நிறைந்த. ஏரினால் - அழகினால். உன - உன்னுடைய.

வெற்றரையுழல்வார் துவராடைய
வேடத்தாரவர்கள் உரைகொள்ளன்மின்
மற்றவருலகின் அவலம்அவை மாற்றகில்லார்
கற்றவர்தொழு தேத்துசிற்றம்பலங்
காதலாற்கழற் சேவடிகைதொழ
உற்றவருலகின் உறுதிகொள வல்லவரே. 10

நாறுபூம்பொழில் நண்ணியகாழியுள்
நான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறுமின்தமிழா லுயர்ந்தாருறை தில்லைதன்னுள்
ஏறுதொல்புக ழேந்துசிற்றம்பலத்
தீசனையிசையாற் சொன்னபத்திவை
கூறுமாறுவல்லா ருயர்ந்தாரொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தேவாரம்

### திருநேரிசை - பண் - கொல்லி [4-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா வெறிக்குஞ் சென்னி
நஞ்சடை கண்ட னாரைக் காணலா நறவ நாறும்
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
துஞ்சடை இருள் கிழியத் துளங்கெரி யாடு மாறே. 1

---

10. வெற்றரை - நிருவாணமாக. துவராடை - காவியுடை. வெற்றரை.........வேடத்தார்-சமணர்கள். கற்றவர்-கல்வியறிவுடைய பெரியோர்கள்; தில்லைவாழந்தணர்களுமாம்.

11. நாறு - மணம் வீசும். இன் தமிழ் - இனிய தமிழால். இசையால் - இசைப் பாட்டால். உயர்ந்தார் - இங்குத் தேவர்கள்.

1. கற்றை - தொகுதி. அடை - பொருந்திய. நறவம்-மணம். மஞ்சு அடை - மேகம் தவழ்கின்ற. துஞ்சுதல் - இறத்தல். இருள் - ஆணவ இருள்.

ஏறனுர் ஏறு தம்பால் இளநிலா எறிக்குஞ் சென்னி
ஆறனுர் ஆறு சூடி ஆயிழை யாளோர் பாகம்
நாறுபூஞ் சோலைத் தில்லை நவின்றசிற் றம்ப லத்தே
நீறுமெய் பூசி நின்று நீண்டெரி யாடு மாறே. 2

சடையனுர் சாந்த நீற்றர் தனிநிலா எறிக்குஞ் சென்னி
உடையனு ருடை தலையில் உண்பதும் பிச்சை யேற்றுக்
கடிகொள்பூந் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
அடிகழ லார்க்க நின்று அனலெரி யாடு மாறே. 3

பையர வசைத்த அல்குற் பனிநிலா எறிக்குஞ் சென்னி
மையரிக் கண்ணி யாளும் மாலுமோர் பாக மாகிச்
செய்யெரி தில்லை தன்னுட் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
கையெரி வீசி நின்று கனலெரி யாடு மாறே. 4

ஓதினுர் வேதம் வாயால் ஒளிநிலா எறிக்குஞ் சென்னிப்
பூதனுர் பூதஞ் சூழப் புலியுரி யதள னுர்தாம்
நாதனுர் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
காதில்வெண் குழைகள் தாழக் கனலெரி யாடு மாறே. 5

ஓருடம் பிருவ ராகி ஒளிநிலா எறிக்குஞ் சென்னிப்
பாரிடம் பாணி செய்யப் பயின்றஎம் பரம மூர்த்தி
காரிடந் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
பேரிடம் பெருக நின்று பிறங்கெரி யாடுமாறே. 6

---

2. ஏறு அனுர் - ஏற்றினைப் போன்றவர். ஆறு - வழி. ஆறனுர்- நல்வழி காட்டுபவர். ஆயிழையாள் - உமாதேவியார். நாறு - வாசனை வீசும். நீறு - திருவெண்ணீறு.

3. சாந்தம் - குளிர்ச்சி; சந்தனமுமாம். நீற்றர் - திருநீற்றினை யுடையவர். உடைதலை - உடைந்த தலை. கடி - வாசனை. ஆர்க்க - ஒலிக்க.

4. பை அரவு—படத்தையுடைய பாம்பு. மையரிக்கண்ணி யாள்-உமாதேவியார். மால்-திருமால். ஓர்-ஒவ்வோர். கையில் ஏந்தும் எரி வேறு, நின்றுடும் எரி வேறு.

5. பூதனுர்-பஞ்சபூத வடிவினுர். பூதம்-சிவபூதம். அதள்- தோள். தாழ-ஆட.

6. இருவர்-சிவம் சத்தி. பாரிடம்-பூதகணம். பாணி செய்ய- கைகளால் தாளம் கொட்ட. பரமமூர்த்தி-மேலான கடவுள். கார்- மேகம்.

முதற்றனிச் சடையை மூழ்க முகிழ்நிலா எறிக்குச் சென்னி
மதக்களிற் றுரிவை போர்த்த மைந்தரைக் காண லாகும்
மதத்துவண் டறையுஞ் சோலை மல்குசிற் றம்ப லத்தே
கதத்ததோ ரரவ மாடக் கனலெரி யாடு மாறே. 7

மறையனார் மழுவொன் றேந்தி மணிநிலா எறிக்குஞ் சென்னி
இறைவனார் எம்பி ரானார் ஏத்துவார் இடர்கள் தீர்ப்பார்
சிறைகொள்நீர்த் தில்லை தன்னுள் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
அறைகழ லார்க்க நின்று அனலெரி யாடு மாறே. 8

விருத்தனாய்ப் பால னாகி விரிநிலா எறிக்குஞ் சென்னி
நிருத்தனார் நிருத்தஞ் செய்ய நீண்டபுன் சடைகள் தாழக்
கருத்தனார் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
அருத்தமா மேனி தன்னோ டனலெரி யாடு மாறே. 9

பாலனாய் விருத்த னாகிப் பனிநிலா எறிக்குஞ் சென்னி
காலனைக் காலாற் காய்ந்த கடவுளார் விடையொன் றேறி
ஞாலமாந் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
நீலஞ்சேர் கண்ட னார்தாம் நீண்டெரி யாடு மாறே. 10

மதியிலா வரக்க னோடி மாமலை யெடுக்க நோக்கி
நெதியன்தோள் நெரிய வூன்றி நீடிரும் பொழில்கள் சூழ்ந்த
மதியந்தோய் தில்லை தன்னுள் மல்குசிற் றம்ப லத்தே
அதிசயம் போலநின்று அனலெரி யாடு மாறே. 11

திருச்சிற்றம்பலம்

---

7. உரிவை-தோல். மைந்தர்-வலிமையுடையவர். மதத்து-கொழுவிய. மல்கு-நிறைந்த. கதம்-கோபம், வலியுமாம்.

8. மணி-அழகு. சிறைகொள் நீர்-தேக்கிவைக்கப் பெற்ற நீர் வளம் பொருந்திய.

9. விருத்தனாய்ப்பாலனாகி - இது விருத்த குமார பாலரான திருவிளையாடலைக் குறிக்கும். நிருத்தனார்-நடனஞ் செய்யும் பெருமான். புன்சடை-சிறுசடை. அருத்தம்-பாதி; பொன்.

10. காய்ந்த-கோபித்த; உதைத்த. ஞாலமாம் தில்லை-உலகிலே சிறந்த தலமாகிய தில்லை. நீலஞ்சேர் கண்டனார்-விஷத்தைக் கண்டத்திலே உடைய பெருமானார்.

11. மதியிலா-அறிவிலா. அரக்கன்-இராவணன். நெதியன்-நிதியுடையவன். அதிசயம் போல-அதிசயமாக.

## திருநேரிசை - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகீ
எத்தினாற் பத்தி செய்கேன் என்னைநீ யிகழ வேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் றாடல் காண்பான் அடியனேன் வந்த வாறே. 1

கருத்தனாய்ப் பாட மாட்டேன் காம்பன தோளி பங்கா
ஒருத்தரால் அறிய வொண்ணாத் திருவுரு வுடைய சோதீ
திருத்தமாந் தில்லை தன்னுள் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
நிருத்தம்நான் காண வேண்டி நேர்பட வந்த வாறே. 2

கேட்டிலேன் கிளைபி ரியேன் கேட்குமா கேட்டி யாகில்
நாட்டினேன் நின்றன் பாதம் நடுப்பட நெஞ்சி னுள்ளே
மாட்டினீர் வாளை பாயும் மல்குசிற் றம்ப லத்தே
கூட்டமாங் குவிமு லையாள் கூடநீ யாடு மாறே. 3

சிந்தையைத் திகைப்பி யாதே செறிவுடை அடிமை செய்ய
எந்தைநீ அருளிச் செய்யாய் யாதுநான் செய்வ தென்னே
செந்தியார் வேள்வி ஓவாத் தில்லைச்சிற் றம்ப லத்தே
அந்தியும் பகலும் ஆட அடியிணை அலசுங் கொல்லோ. 4

கண்டவா திரிந்து நாளுங் கருத்தினால் நின்றன் பாதங்
கொண்டிருந் தாடிப் பாடிக் கூடுவன் குறிப்பி னாலே

---

1. பத்தனாய்-பத்தியுடையவனாய். பாடமாட்டேன்-பாடேனாயினும். எத்தினால்-எதனால். முத்தனே-பாசங்களினின்று நீங்கியவனே; முத்தி தருபவனே எனினுமாம் அத்தா-ஐயனே. வந்தவாறே-வந்த விதந்தான் என்னே.

2. காம்பு அன--மூங்கிலை ஒத்த. ஒருத்தரால்--எவராலும். திருத்தம் ஆம்-உயிர்களுக்குத் திருத்தத்தை ஆக்கும். நிருத்தம்-நடனம்.

3. கிளை-இருவினைச்சுற்றம். நடுப்பட-மனத்தின் நடுவுள் நீங்காமல். மாடு-பக்கம்.

4. செறிவு-மிக நெருக்கம். எந்தை-என் தந்தையே. செந்தி-செந்தீ-சிவந்த தீ. அலசுங் கொலோ-வருந்துமோ

5. கூடுவன்-சேர்வேன். குறிப்பினால்-அருட்குறிப்பினால். பண்-இசை. எண்டிசையோர்-திக்குப்பாலகர்.

வண்டுபண் பாடுஞ் சோலை மல்குசிற் றம்ப லத்தே
எண்டிசை யோரும் ஏத்த இறைவநீ யாடு மாறே. 5

பார்த்திருந் தடிய னேன்நான் பரவுவன் பாடி யாடி
மூர்த்தியே என்பன் உன்னை மூவரில் முதல்வன் என்பன்
ஏத்துவர் இடர்கள் தீர்ப்பாய் தில்லைச்சிற் றம்ப லத்துக்
கூத்தாவுன் கூத்துக் காண்பான் கூடநான் வந்த வாறே. 6

பொய்யினைத் தவிர விட்டுப் புறமலா அடிமை செய்ய
ஐயநீ அருளிச் செய்யாய் ஆதியே ஆதி மூர்த்தி
வையகந் தன்னில் மிக்க மல்குசிற் றம்ப லத்தே
பையநின் னாடல் காண்பான் பரமநான் வந்த வாறே. 7

மனத்தினார் திகைத்து நாளும் மாண்பலா நெறிகள் மேலே
கனைப்பரால் என்செய் கேனோ கறையணி கண்டத் தானே
தினைத்தனை வேதங் குன்றாத் தில்லைச்சிற் றம்ப லத்தே
அனைத்துநின் நிலயங் காண்பான் அடியனேன் வந்தவாறே. 8

நெஞ்சினைத் தூய்மை செய்து நினைக்குமா நினைப்பி யாதே
வஞ்சமே செய்தி யாலோ வானவர் தலைவ னேநீ
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
அஞ்சொலாள் காண நின்று அழகநீ யாடு மாறே. 9

மண்ணுண்ட மால வனும் மலர்மிசை மன்னி னானும்
விண்ணுண்ட திருவு ருவம் விரும்பினார் காண மாட்டார்

6. பரவுவன்-துதிப்பேன். மூவரில்-பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மூவரில். என்பன்-என்று சொல்வேன். கூத்தா-அருட் கூத்தாடுபவனே.

7. புறமலா அடிமை-அகம்படித் தொண்டு. ஆதியே-முதன்மையானவனே. பைய-மெதுவாக.

8. மாண்பு அலா-மாட்சிமை இல்லாத. கனைப்பர்-வேட்கை மிக்குச் செல்வர். கறை-விஷம். தினை-ஒருதானியம்; சிறிய அளவு.

9. நினைக்குமா நினைப்பியாதே-நீ நினைத்தால் அன்றி நான் நினைக்கும் வகையால் நினைக்க முடியாது. அம் சொலாள்-சிவகாமி அம்மையார்.

10. மலர்மிசை மன்னினான்-பிரம தேவன். விண்ணுண்ட-விண்ணினையும் கடந்து செல்லும். பண்ணுண்ட பாடல்-பண்ணுடன் கூடிய இசைப்பாடல்.

திண்ணுண்ட திருவே மிக்க தில்லைச்சிற் றம்ப லத்தே
பண்ணுண்ட பாட லோடும் பரமநீ யாடு மாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் - பண் - கொல்லி [4-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாளை யுடைக்கமு கோங்கிப்பன்
மாட நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி
வாழ்வயற் றில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம்
பலத்தர னாடல்கண்டால்
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப்
பேய்த்தொண்டர் காண்பதென்னே. 1

பொருவிடை யொன்றுடைப் புண்ணிய
மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை
மணாளன் உலகுக்கெல்லாம்
திருவுடை அந்தணர் வாழ்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே. 2

தொடுத்த மலரொடு தூபமுஞ்
சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு
மாலுக்குங் காண்பரியான்

---

1. கமுகு-பாக்குமரம். வாளை-வாளைமீன். ஆளவுடை-ஆளாக்குவதற்கு உடைய. பீளை-கண் அழுக்கு.

2. பொருவிடை-போர்புரியும் இடபம். அதளன்-தோலையுடையவன். திருவுடை அந்தணர்-சிவச் செல்வமுடைய தில்லைவாழந்தணர்கள்.

3. சாந்தும்-சந்தனமும். அயன்-பிரமன். பொடி-திருவெண்ணீறு. துகில்—வஸ்திரம்.

பொடிக்கொண் டணிந்து பொன்னு
　　 கியதில்லைச் சிற்றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு
　　 மற்றினிக் காண்பதென்னே. 3

வைச்ச பொருள்நமக் காகுமென்
　　 றெண்ணி **நமச்சிவாய**
அச்ச மொழிந்தேன் அணிதில்லை
　　 யம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி
　　 உந்தியின் மேலசைத்த
கச்சின் அழகுகண் டாற்பின்னைக்
　　 கண்கொண்டு காண்பதென்னே. 4

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற
　　 தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற ஒண்கண் மலைமகள்
　　 கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த
　　 நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற ஆடல்கண் டாற்பின்னைக்
　　 கண்கொண்டு காண்பதென்னே. 5

ஊனத்தை நீக்கி உலகறிய
　　 என்னை யாட்கொண்டவன்
தேனைத் தெனக்கினி யான்தில்லைச்
　　 சிற்றம் பலவன்எங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை
　　 உண்டகண் டத்திலங்கும்
ஏனத்தெயிறு கண்டாற் பின்னைக்
　　 கண்கொண்டு காண்பதென்னே. 6

---

4. வைச்ச—வைத்த. அச்சம்-பிறவிப்பயம். பிச்சன்--பித்தன் நந்தி—சிவன். கச்சு—இடைக்கட்டு.

5. செய்ஞ்ஞின்ற—வயலின்கண் பொருந்திய. மைஞ்ஞின்ற—கருநிறம் பொருந்திய. நீலமணிமிடற்றான்—நீலகண்டன.

6. எங்கோன்—எமது தலைவன். ஏனத்துஎயிறு-பன்றிக்கொம்பு.

தெரித்த கணையால் திரிபுர
மூன்றுஞ்செந் தீயின்மூழ்க
எரித்த இறைவன் இமையவர்
கோமான் இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே. 7

சுற்று மமரர் சுரபதி
நின்திருப் பாதமல்லால்
பற்றொன் றிலோமென் றழைப்பப்
பரவையுள் நஞ்சையுண்டான்
செற்றங் கனங்கனைத் தீவிழித்
தான்தில்லை யம்பலவன்
நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே. 8

சித்தத் தெழுந்த செழுங்கம
லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமும் மாணிக்கந்
தன்னுள் விளங்கிய தூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே. 9

---

7. கணை-திருமாலாகிய அம்பு. திரிபுரம் மூன்றும்-ஆகாயத்தில் திரிகின்ற பொன், வெள்ளி, இரும்புகளால் ஆகிய மூன்று கோட்டைகள். இணை-இரண்டு. சிரித்தமுகம்-புன்சிரிப்பையுடைய திருமுகம்.

8. சுரபதி-இந்திரன். பரவையுள்-கடலில். அனங்கனை-மன்மதனை. தீ—நெற்றித் தீயினால். விழித்தான்—விழித்து எரித்தான்.

9. சித்தம்—மனம். சித்தத்தெழுந்த செழுங்கமலம்—உள்ளக் கமலம். வைத்த மனத்தவர்—மெய்யன்பர்கள்; தில்லைவாழந்தணர்களுமாம். தூமத்த மலர்—தூய்மையான ஊமத்தை மலர்.

தருக்கு மிகுத்துத்தன் தோள்வலி
யுன்னித் தடவரையை
வரைக்கை களாலெடுத் தார்ப்ப
மலைமகள் கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்தும்
அணிதில்லை யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட
கண்கொண்டு காண்பதென்னே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கருநட்ட கண்டனை அண்டத்
தலைவனைக் கற்பகத்தைச்
செருநட்ட மும்மதில் எய்யவல்
லானைச்செந் தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக்
கிறையைச்சிற் றம்பலத்துப்
பெருநட்ட மாடியை வானவர்
கோனென்று வாழ்த்துவனே. 1

ஒன்றி யிருந்து நினைமின்கள்
உந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற்
கடிந்தா னடியவற்காய்ச்

---

10. தடவரை-விசாலமான மேருமலை. முடிபத்தும்-தலை பத்தும்.

1- கருநட்ட-கரிய விஷம் பொருந்திய. செருநட்ட-பகை பூண்ட. பெருநட்டம்-ஐந்தொழில் புரியும் திருக்கூத்து. கோன்-தலைவன்.

2. ஒன்றியிருந்து—ஒருமுகப்பட்டு. நினைதல்—தியானித்தல். உந்தமக்கு-உங்களுக்கு. திருக்குறிப்பு-திருமுகக்குறிப்பு.

சென்று தொழுமின்கள் தில்லையுட்
 சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாயென்னும் எம்பெரு
 மான்றன் திருக்குறிப்பே. 2

கன்மன வீர்கழி யுங்கருத்
 தேசொல்லிக் காண்பதென்னே
நன்மன வர்நவில் தில்லையுட்
 சிற்றம் பலத்துநட்டம்
பொன்மலை யில்வெள்ளிக் குன்றது
 போலப் பொலிந்திலங்கி
என்மன மேயொன் றிப் புக்கனன்
 போந்த சுவடில்லையே. 3

குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
 வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
 மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
 பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
 தேயிந்த மாநிலத்தே. 4

வாய்த்தது நந்தமக் கீதோர்
 பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசு பதமருள்
 செய்தவன் பத்தருள்ளீர்

---

3. கன்மனவீர்-கல்போன்ற வலியமனமுடையவர்களே. பொன்மலை-இங்குப் பொன்னம்பலம். வெள்ளிக்குன்று-இங்கு திருவெண்ணீறு பூசிய இறைவரது திருமேனி. புக்கனன்-புகுந்தனன். சுவடு-அடையாளம்.

4. குனித்த-வளைந்த. கொவ்வை-கோவைப்பழம். குமிண் சிரிப்பு-இதழ்கள் குவிந்து கூடிய புன்சிரிப்பு. பனித்த-ஈரமுள்ள. இனித்தம்-எஞ்ஞான்றும் இனிதாந் தன்மை. மனித்த பிறவி-மானுடப் பிறவி.

5. நந்தமக்கு-நமக்கு. பார்த்தன்-அருச்சுனன். நந்தம்-நம்முடைய. கூழைமை-கடமை.

கோத்தன் று முப்புரந் தீவளைத்
தான்தில்லை யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன்
றோநந்தங் கூழைமையே. 5

பூத்தன பொற்சடை பொன்போல்
மிளிரப் புரிகணங்கள்
ஆர்த்தன கொட்டி யரித்தன
பல்குறட் பூதகணம்
தேத்தென என்றிசை வண்டுகள்
பாடுசிற் றம்பலத்துக்
கூத்தனிற் கூத்துவல் லாருள
ரோஎன்றன் கோல்வளைக்கே. 6

முடிகொண்ட மத்தமும் முக்கண்ணின்
நோக்கும் முறுவலிப்பும்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண்
ணீறுஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித்
தோலும்என் பாவிநெஞ்சில்
குடிகொண்ட வாதில்லை யம்பலக்
கூத்தன் குரைகழலே. 7

படைக்கல மாகவுன் னாமத்
தெழுத்தஞ்சென் னாவிற்கொண்டேன்
இடைக்கல மல்லேன் எழுபிறப்
பும்உனக் காட்செய்கின்றேன்

---

6. பொற்சடை-செஞ்சடை. பல்குறட் பூதகணம்-பலவகைப் பூதகூட்டங்கள். கோல்வளை-அழகிய வளையலையணிந்த பெண்.

7. மத்தம்-ஊமத்தைமலர். துடி–உடுக்கை. துதைந்த-பூசிய. சுரிகுழலாள்-உமாதேவியார். குரைகழல்-ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த திருவடிகள்.

8. படைக்கலம்-பிறவிக் காட்டை அழிக்கும் படை. எழுத்து அஞ்சு-திருவைந்தெழுத்து. இடைக்கலம்-புது அடிமை. துடைக்கினும்-தள்ளினும்.

துடைக்கினும் போகேன் தொழுது
வணங்கித்தூ நீறணிந்துன்
அடைக்கலங் கண்டாய் அணிதில்லைச்
சிற்றம் பலத்தரனே. 8

பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ
றணிந்து புரிசடைகள்
மின்னொத் திலங்கப் பலிதேர்ந்
துழலும் விடங்கவேடச்
சின்னத்தி னால்மலி தில்லையுட்
சிற்றம் பலத்துநட்டம்
என்அத்தன் ஆடல்கண் டின்புற்ற
தாலிவ் விருநிலமே. 9

சாட வெடுத்தது தக்கன்றன்
வேள்வியிற் சந்திரனை
வீட வெடுத்தது காலனை
நாரணன் நான்முகனுந்
தேட வெடுத்தது தில்லையுட்
சிற்றம் பலத்துநட்டம்
ஆட வெடுத்திட்ட பாதமன்
றோநம்மை யாட்கொண்டதே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை

---

9. புரிசடை--கட்டமைந்த சடைகள். விடங்க—அழகனே. அத்தன்-தலைவன். இவ்விரு நிலம் இன்புற்றது.

10. சாட—அழிக்க. எடுத்தது—தூக்கியது. வீட—அழிக்க. ஆட எடுத்திட்ட—ஆடும்படி எடுத்திட்ட. அன்றோ—அல்லவா.

1. அன்னம் பாலிக்கும்—எக் காலத்திலும் அன்னம் கொடுக்கும். பொன்—செல்வம். இன்னம்—இன்னும். பாலிக்குமோ—வருமோ.

என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே. 1

அரும்பற் றப்பட ஆய்மலர் கொண்டுநீர்
சுரும்பற் றப்படத் தூவித் தொழுமினோ
கரும்பற் றச்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பெரும்பற் றப்புலி யூரெம் பிரானையே. 2

அரிச்சுற் றவினை யால்அடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனம்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே. 3

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. 4

ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெலாம்
நான்நி லாவி யிருப்பனென் னாதனைத்
தேன்நி லாவிய சிற்றம் பலவனார்
வான்நி லாவி யிருக்கவும் வைப்பரே. 5

சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைத்தொழச் செல்லும்அச்
சிட்டர் பாலணு காள்செறு காலனே. 6

---

2. அரும்பு அற்றப் பட—அரும்பு மலரும் பருவத்தில். தூவி—அருச்சித்து. காமனை—மன்மதனை.

3. அரிச்சுற்ற வினை—வருத்துகின்ற கூட்டமாகிய வினைகள். எரிச்சுற்ற—தீயினால்வேக. சிரிச்சுற்று—சிரிக்கலுற்று.

4. அல்லல்—பெருந்துன்பம். தொல்லை வல் வினை — பழைய சஞ்சிதவினை. தொந்தம்—தொடர்பு.

5. ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுது—உடலில் உயிர் உள்ளளவும். தேன்—இங்கு இனிமை. வான் நிலாவி இருக்கவும் — சுவர்க்கத்தில் இன்பத்துடன் இருக்கவும்.

6. சிட்டர்—நன்மை மிக்க அன்பர். சிட்டன்—மேலானவன். அணுகான்—அருகு செல்லமாட்டான்.

ஒருத்த னார்உல கங்கட் கொருசுடர்
திருத்த னார்தில்லைச் சிற்றம் பலவனார்
விருத்த னார்இளை யார்விடம் உண்டஎம்
அருத்த னார்அடி யாரை அறிவரே. 7

விண்ணி றைந்ததோர் வெவ்வழ லின்னுரு
எண்ணி றைந்த இருவர்க் கறிவொணாக்
கண்ணி றைந்த கடிபொழில் அம்பலத்
துள்நி றைந்துநின் றாடும் ஒருவனே. 8

வில்லை வட்டப் படவாங்கி அவுணர்தம்
வல்லைவட் டம்மதில் மூன்றுடன் மாய்த்தவன்
தில்லைவட் டந்திசை கைதொழு வார்வினை
ஒல்லைவட் டங்கடந் தோடுதல் உண்மையே. 9

நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை அம்பலத்
தாடி பாதமென் நெஞ்சுள் இருக்கவே. 10

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் திருமலை
அதிர ஆர்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே. 11

திருச்சிற்றம்பலம்

---

7. ஒருத்தனார்—ஒப்பற்றவர். விருத்தனார் இளையார்-விருத்தனாகவும் இளையவராகவும் விளங்குபவர். அருத்தனார்-பொன்போன்றவர்; கடவுள்.

8. விண் நிறைந்ததோர் வெவ்வழல்—அழற்பிழம்பு. இருவர்—பிரமவிஷ்ணு. கண் நிறைந்த—தேன் நிறைந்த. கடி—வாசனை.

9. வில்லை வட்டப்பட வாங்கி-வில்லினை வளைத்து. வல்லை வட்டம்-வளைந்த. தில்லை வட்டம்-தில்லையின் எல்லையை. ஒல்லை-பழைமை; விரைவு.

10. நாடி—ஆராய்ந்து. வல்லரோ—வல்லவராவரோ. அம்பலத்தாடி—நடராசப் பெருமான். நெஞ்சுள்—மனத்தினுள்ளே.

11. மதுரம் — இனிமை. சதுரன் — சதுரப்பாடுடையவன். திருமலை-கயிலைமலை. மிதி கொள் சேவடி—மிதித்த திருவடி. உய்ம்மின்—பேறு பெறுங்கள்.

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்து வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே. 1

தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய ஒருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனே. 2

கட்டும் பாம்புங் கபாலங்கை மான்மறி
இட்ட மாயிடு காட்டெரி யாடுவான்
சிட்டர் வாழ்தில்லை அம்பலக் கூத்தனை
எட்ட னைப்பொழு தும்மறந் துய்வனே. 3

மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலாம் ஆளக் கொடுத்தவன்
ஆணியைச் செம்பொன் அம்பலத் துள்நின்ற
தாணு வைத்தமி யேன்மறந் துய்வனே. 4

பித்த னைப்பெருங் காடரங் காவுடை
முத்த னைமுளை வெண்மதி சூடியைச்
சித்தனைச் செம்பொன் அம்பலத் துள்நின்ற
அத்த னைஅடி யேன்மறந் துய்வனே. 5

---

1. பனைக்கை — பனைபோன்ற கை. அனைத்தும் — உலகெலாம் (தனது).

2. தீர்த்தன் — பரிசுத்தமானவன். ஒருவனை — ஒப்பற்றவனை. கொடியேன்—தீவினையேன்.

3. மான்மறி—கலைமான். எட்டனைப் பொழுது—எள் அளவு உள்ள சிறு பொழுது (எள்+தனை—எட்டனை)

4. மாணி—பிரமசாரி; சண்டேசர். ஆணி—பொன்உரையாணி. தாணுவை—அசையாத மலைவடிவானவனை.

5. பெருங்காடு - சுடுகாடு. அரங்கா — சபையாக. முத்தன் — மேலானவன்.

நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கும் அறிவொணுச்
சோதி யைச்சுடர்ச் செம்பொனின் அம்பலத்
தாதி யைஅடி யேன்மறந் துய்வனே. 6

மைகொள் கண்டன்எண் தோளன்முக் கண்ணினன்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனை
செய்ய மாதுறை சிற்றம்ப லத்தெங்கள்
ஐய னைஅடி யேன்மறந் துய்வனே. 7

முழுதும் வானுல கத்துள தேவர்கள்
தொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னினுல்
எழுதி மேய்ந்தசிற் றம்பலக் கூத்தனை
இழுதை யேன்மறந் தெங்ஙனம் உய்வனே. 8

காரு லாமலர்க் கொன்றையந் தாரனை
வாரு லாமுலை மங்கைம ணாளனைத்
தேரு லாவிய தில்லையுட் கூத்தனை
ஆர்கி லாஅமு தைமறந் துய்வனே. 9

ஓங்கு மால்வரை ஏந்தலுற் றான்சிரம்
வீங்கி விம்முற ஊன்றிய தாளினன்
தேங்கு நீர்வயல் சூழ்தில்லைக் கூத்தனைப்
பாங்கி லாத்தொண்ட னேன்மறந் துய்வனே. 10

திருச்சிற்றம்பலம்

---

6. நிறைவை—எங்கும் நிறைந்தவனை, ஓதியை—ஓதினவனை,

7. மை-கருமை; விஷம். பை கொள் - படத்தைக் கொண்ட செய்யமாது-இலக்குமி.

8. இங்குத் தேவர்கள் முதலில் நடராசப் பெருமான் எழுந் தருளிய அம்பலத்தைப் பொன்னால் வேய்ந்தனர் என்பது வரலாறு இழுதையேன்-அறிவில்லாதவன்.

9. கார் உலாம் - கார் காலத்தில் பூக்கும். தேர் உலாவிய - தேர் ஓடும். ஆர்கிலா-உண்ணத்தெவிட்டாத.

10. ஓங்கு மால் வரை-கயிலைமலை. ஏந்தலுற்றான்-இராவணன். பாங்கு இலா--பண்பு இலாத.

## பெரிய திருத்தாண்டகம் [6-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைப்
திகழொளியைச் தேவர்கள்தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 1

கற்றானைக் கங்கைவார் சடையான் தன்னைக்
காவிரிசூழ் வலஞ்சுழியுங் கருதி னானை
அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய் வானை
ஆரூரும் புகுவானை அறிந்தோ மன்றே
மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானை
வானவர்க ளெப்பொழுதும் வணங்கி ஏத்தப்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 2

கருமானின் உடையதளே உடையா வீக்கிக்
கனைகழல்கள் கலந்தொலிப்ப அனல்கை ஏந்தி
வருமானத் திரள்தோள்கள் மட்டித் தாட
வளர்மதியஞ் சடைக்கணிந்து மானேர் நோக்கி
அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண
அமரர்கணம் முடிவணங்க ஆடு கின்ற
பெருமானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 3

---

1. அரியானை-உணரவும் ஓதவும் அரியவனை. அந்தணர்-தில்லை வாழந்தணர்கள். பிறவா நாள்-பிறவாத நாள்; இறந்து பட்ட நாள்.

2. வலஞ்சுழி - ஒரு சிவ தலம். அற்றார் - துணையற்றவர். அலந்தார்-துன்பப்பட்டவர்.

3. கருமான்-யானை. வீக்கி-கட்டி. மட்டித்து ஆட-வளைந்து ஆட. மானேர்-மானை ஒத்த.

அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன் தன்னை
அமரர்கள்தம் பெருமானை அரனை மூவா
மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் தன்னை
மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும்
திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந்
திரிசுடர்கள் ஓரிரண்டும் பிறவு மாய
பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 4

அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்
பொருத்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 5

கரும்பமரும் மொழிமடவாள் பங்கன் தன்னைக்
கனவயிரக் குன்றனைய காட்சி யானை
அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் தன்னை
அருமறையோ டாறங்க மாயி னானைச்
சுரும்பமருங் கடிபொழில்கள் சூழ்தென் னாரூர்ச்
சுடர்க்கொழுந்தைத் துளக்கில்லா விளக்கை மிக்க
பெரும்பொருளைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 6

---

4. மூவாமருந்து - தேவாமிர்தம், தாரகை - நட்சத்திரம், திரி சுடர்கள் ஓர் இரண்டும் - சூரியன், சந்திரன் இரண்டும். பெருந்தகை - பெருந்தகுதி வாய்ந்தவன்.

5. அருந்துணை - அரிய துணையாக இருப்பவனை, அல்லல் - துன்பம், அருமருந்து - தேவாமிர்தம், பொதுநீக்கி - தனிமையாக நின்று, தனை நினைய - தன்னை நினைக்க.

6. கரும்பு அமரும் - கரும்புபோல் இனிமை பொருந்திய. சுரும்பு - வண்டு, தென்னாரூர் - திருவாரூர்.

வரும்பயனை எழுநரம்பி னோசை யானை
வரைசிலையா வானவர்கள் முயன்ற வாளி
அரும்பயஞ்செ யவுணர்புர மெரியக் கோத்த
அம்மானை அலைகடல்நஞ் சயின்றான் தன்னைச்
சுரும்பமரும் குழன்மடவார் கடைக்கண் நோக்கில்
துளங்காத சிந்தையராய்த் துறந்தோ ருள்ளப்
பெரும்பயனைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 7

காரானை யீருரிவைப் போர்வை யானைக்
காமருபூங் கச்சியே கம்பன் தன்னை
ஆரேனும் அடியவர்கட் கணியான் தன்னை
அமரர்களுக் கறிவரிய அளவி லானைப்
பாரோரும் விண்ணோரும் பணிய நட்டம்
பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை எண்ணில்
பேரானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 8

முற்றாத பால்மதியஞ் சூடி னானை
மூவுலகுந் தானாய முதல்வன் தன்னைச்
செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் தன்னைத்
திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக்
குற்றாலத் தமர்ந்துறையுங் குழகன் தன்னைக்
கூத்தாட வல்லானைக் கோனை ஞானம்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 9

---

7. வரும்பயனை - வருகின்ற பயனாக உள்ளவனை. அயின்றான் - உண்டவன். மடவார் - பெண்கள்.

8. காரானை - கரிய யானை. காமரு - அழகிய. பாரோர் - உலக மக்கள். எண்ணில் பேரானை - எண்ணில்லாத திருநாமமுடையவனை.

9. முற்றாத - முதிராத. செற்றார்கள் - பகைவர்கள். குற்றாலம் - திருக்குற்றாலம். கோனை - தலைவனை.

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிக்கமலத் திருந்தவனுங் காணு வண்ணம்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கும்
ஏரொளியை இருநிலனும் விசும்பும் விண்ணும்
ஏழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 10

திருச்சிற்றம்பலம்

---

## புக்க திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மங்குல் மதிதவழும் மாட வீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்று லத்தார்
குடமூக்கி லுள்ளார்போய்க் கொள்ளம் பூதூர்த்
தங்குமிட மறியார் சால நாளார்
தருமபுரத் துள்ளார் தக்க ளூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 1

நாக மரைக்கசைத்த நம்ப ரிந்நாள்
நனிபள்ளி யுள்ளார்போய் நல்லூர்த் தங்கிப்
பாகப் பொழுதெலாம் பாசூர்த் தங்கிப்
பரிதி நியமத்தார் பன்னி ருநாள்

---

10. கார் ஒளிய - கருநிறம் பொருந்திய. ஏர்-அழகு. விசும்பு-ஆகாயம். விண்-விண்ணுலகம்.

1. மங்குல் - ஆகாயம். மயிலாப்பு - திருமயிலாப்பூர். கொங்கு-கொங்குநாடு. குடமூக்கு—கும்பகோணம்.

2. நம்பர் - நம்பிவழிபடத்தக்கவர்; சிவன். ஓவா - இடைவிடாத. மிழலை - திருவீழிமிழலை. பொய்யாய்பொருள் - உண்மைப் பொருள்; மோட்சச் செல்வம்.

வேதமும் வேள்விப் புகையும் ஓவா
விரிநீர் மிழலை எழுநாள் தங்கிப்
போகமும் பொய்யாப் பொருளு மானார்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 2

**து**றங்காட்டி யெல்லாம் விரித்தார் போலுந்
தூமதியும் பாம்பு முடையார் போலும்
மறங்காட்டி மும்மதிலும் எய்தார் போலும்
மந்திரமுந் தந்திரமுந் தாமே போலும்
அறங்காட்டி அந்தணர்கள் ஆல நீழல்
அறமருளிச் செய்த அரனு ரிந்நாள்
புறங்காட் டெரியாடிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 3

**வா**ரேறு வனமுலையாள் பாக மாக
மழுவாள் கையேந்தி மயானத் தாடிச்
சீரேறு தண்வயல்சூழ் ஓத வேலித்
திருவாஞ் சியத்தார் திருநள் ளாற்றார்
காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த
கண்விளங்கு நெற்றியார் கடல்நஞ் சுண்டார்
போரேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 4

**கா**ரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடிக்
கபாலங்கை யேந்திக் கணங்கள் பாட
ஊரா ரிடும்பிச்சை கொண்டு ழலும்
உத்தமராய் நின்ற ஒருவ னார்தாம்
சீரார் கழல்வணங்கும் தேவ தேவர்
திருவாரூர்த் திருமூலட் டானம் மேயார்
போரார் விடையேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 5

---

3. அந்தணர் - சனகாதிமுனிவர்கள். புறங்காடு - சுடுகாடு.
4. வார் - கச்சு. ஓதவேலி - கடற்கரையை எல்லையாக உடைய.
5. கார் ஆர் - கார்காலத்தில் பொருந்தி. கண்ணி - சிரமாலை. கபாலம் - தலையோடு.

காதார் குழையினர் கட்டங் கத்தர்
கயிலாய மாமலையார் காரோ ணத்தார்
மூதாயர் மூதாதை யில்லார் போலும்
முதலு மிறுதியுந் தாமே போலும்
மாதாய மாதர் மகிழ அன்று
வன்மதவேள் தன்னுடலங் காய்ந்தா ரிந்நாள்
போதார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 6

இறந்தார்க்கும் என்றும் இறவா தார்க்கும்
இமையவர்க்கும் ஏகமாய் நின்று சென்று
பிறந்தார்க்கு மென்றும் பிறவா தார்க்கும்
பெரியான்றன் பெருமையே பேச நின்று
மறந்தார் மனத்தென்றும் மருவார் போலும்
மறைக்காட் டுறையும் மழுவாட் செல்வர்
புறந்தார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 7

குலாவெண் டலைமாலை யென்பு பூண்டு
குளிர்கொன்றைத் தாரணிந்து கொல்லே றேறிக்
கலாவெங் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கையோ டனலேந்திக் காடு றைவார்
நிலாவெண் மதியுரிஞ்ச நீண்ட மாடம்
நிறைவயல்சூழ் நெய்த்தானம் மேய செல்வர்
புலால்வெண் டலையேந்திப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 8

---

6. கட்டங்கம் - மழு. காரோணம் - நாகைக்காரோணம். மூதாயர் - பாட்டி. மூதாதை - பாட்டன். முதலும் இறுதியும் - இங்கு ஆதியும் அந்தமும் ஆகும்.

7. ஏகமாய் - தனித்து. மறந்தார் - தன்னை மறந்தவர். மருவார் - அடையார்.

8. குலா - ஆடம்பரமான. கொல் ஏறு - கொல்லும் வலிமையுள்ள இடபம். புலால் - சதைப்பற்றுள்ள. காடு - சுடுகாடு. மதி உரிஞ்ச - சந்திரன் தவழ.

சந்தித்த கோவணத்தர் வெண்ணூல் மார்பர்
சங்கரனைக் கண்டீரோ கண்டோ மிந்நாள்
பந்தித்த வெள்விடையைப் பாய வேறிப்
படுதலையி லென்கொலோ ஏந்திக் கொண்டு
வந்திங்கென் வெள்வளையுந் தாமு மெல்லா
மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ளப்
பொன்றீ மணிவிளக்குப் பூதம் பற்றப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 9

பாதங்கள் நல்லார் பரவி யேத்தப்
பத்திமையாற் பணிசெய்யும் தொண்டர் தங்கள்
ஏதங்கள் தீர இருந்தார் போலும்
எழுபிறப்பும் ஆளுடைய ஈச னார்தாம்
வேதங்க ளோதியோர் வீணை யேந்தி
விடையொன்று தாமேறி வேத கீதர்
பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கிப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 10

பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன் றார்த்துப்
பகவனார் பாரிடங்கள் சூழ நட்டஞ்
சிட்டராய்த் தீயேந்திச் செல்வார் தம்மைத்
தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோ மிந்நாள்
விட்டிலங்கு சூலமே வெண்ணூ லுண்டே
ஓதுவதும் வேதமே வீணை யுண்டே
கட்டங்கங் கையதே சென்று காணீர்
கறைசேர் மிடற்றெங் கபாலி யார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. சந்தித்த - அழகிய. வெண்ணூல் - பூணூல். வெள்வளை - வெள்ளிய சங்குவளையல்.

10. ஏதங்கள் - குற்றங்கள். விடை - இடபம். வீக்கி - அணிந்து.

11. பாரிடங்கள் - பூதகணங்கள். விட்டிலங்கு - ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற. கபாலி - கபாலத்தையுடையவன்.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

## பண் — குறிஞ்சி [7-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மடித்தாடு மடிமைக்கண் அன்றியே
மனனேநீ வாழு நாளும்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடுங் கரதலத்தில் தமருகமும்
எரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 1

பேராது காமத்திற் சென்றார்போல்
அன்றியே பிரியா துள்கிச்
சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன்
அடிவீழுந் திருவி னாரை
ஓராது தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 2

நரியார்தங் கள்ளித்தாற் பக்கான
பரிசொழிந்து நாளும் உள்கிப்
பிரியாத அன்பராய்ச் சென்றுமுன்
அடிவீழும் சிந்தை யாரைத்

---

1. மடித்தாடும் - வட்டமாக ஆடும். ஆட்டி - அலைத்து. கடுத்து ஆடும் - விசையாக ஆடும். தமருகம் - உடுக்கை.

2. பேராது - இடைவிடாமல். உள்கி - தியானித்து. ஓராது - ஆராயாமல். தருமனார் - எமதருமனார். பேர் - புகழ்.

3. நரியார் - நரிபோன்ற வஞ்சகர்கள். பக்கு - பிளவு. வீழும் - வீழ்ந்து வணங்கும்.

தரியாது தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 3

கருமையார் தருமனார் தமர்நம்மைக்
கட்டியகட் டறுப்பிப் பானை
அருமையாந் தன்னுலகந் தருவானை
மண்ணுலகங் காவல் பூண்ட
உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா
மன்னவரை மறுக்கஞ் செய்யும்
பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 4

கருமானின் உரியாடைச் செஞ்சடைமேல்
வெண்மதியக் கண்ணி யானை
உருமன்ன கூற்றத்தை உருண்டோட
உதைத்துகந் துலவா இன்பம்
தருவானைத் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
பெருமானார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 5

உய்த்தாடித் திரியாதே உள்ளமே
ஒழிகண்டாய் ஊன்கண் ஓட்டம்
எத்தாலுங் குறைவில்லை என்பர்காண்
நெஞ்சமே நம்மை நாளும்

---

4. தன்னுலகம் - சிவலோகம். திறை - கப்பம். மறுக்கம் செய்யும் - வருத்தும்.

5. உரும் - இடியேறு. கூற்றம் - இயமன். உலவா - அழியாத.

6. உய்த்து ஆடி - புலன்கள் ஆட்டியபடியெல்லாம் ஆடி. ஊன் கண் ஓட்டம் - சரீரப்பற்று. பைத்து - படம் எடுத்து. பித்தாடி பித்தன்.

பைத்தாடும் அரவினன் படர்சடையன்
பரஞ்சோதி பாவங் தீர்க்கும்
பித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 6

**முட்டாத முச்சந்தி மூவா**
**யிரவர்க்கு மூர்த்தி** யென்னப்
பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார்
பாவமும் வினையும் போக
விட்டானை மலைஎடுத்த இராவணனைத்
தலைபத்தும் நெரியக் காலால்
தொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 7

கற்றானுங் குழையுமா றன்றியே
கருதுமா கருத கிற்றார்க்
கெற்றாலுங் குறைவில்லை என்பர்காண்
உள்ளமே நம்மை நாளுஞ்
செற்றாட்டித் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
பெற்றேறி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 8

நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ்
செய்மனமே நம்மை நாளும்
தாடுடைய் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்

---

7. முட்டாத - தவறாத. முச்சந்தி - மூன்று சந்தியா காலங்கள். மூவாயிரவர் - தில்லைவாழந்தணர் மூவாயிரவர்.

8. கல்தானும் குழையுமாறு - கல்லும் இளகும்படி. எற்றாலும் - எவற்றாலும். பெற்றேறி - இடபமேறி.

9. நாடு உடைய - எல்லா நாடும் தனக்கே உரிய. தாடுடைய - தண்டித்தலையுடைய. மோடு - முரட்டுத்தனம். முடை - நாற்றம். மூடம் - அறிவு மயக்கம்.

மோடுடைய சமணர்க்கும் மூடையுடைய
சாக்கியர்க்கும் மூடம் வைத்த
பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 9

பாரூரும் அரவல்குல் உமைநங்கை
யவள்பங்கன் பைங்கண் ஏற்றன்
ஊரூரன் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் தம்பிரான் ஆரூரன்
மீகொங்கில் அணிகாஞ் சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்
றம்பலத்தே பெற்றா மன்றே. 10

திருச்சிற்றம்பலம்.

---

10. பார் - பூமி. பைங்கண் - பசிய கண். ஊரூரன் - ஊர் தோறும் திரிபவன். மீகொங்கு - மேல் கொங்கு நாட்டில். காஞ்சி - காஞ்சிநதி. பேரூர் - திருப்பேரூர்; மேலைச்சிதம்பரம்.

## மாணிக்கவாசக சுவாமிகள்

## திருவாசகம்

## [8-ஆம் திருமுறை]

# சிவபுராணம் *

### கலிவெண்பா

*திருச்சிற்றம்பலம்*

**நமச்சிவாய** வாஅழ்க நாதன்றாள் வாழ்க !
இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க !
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க !
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க !
ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க !
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க !

---

* சிவபுராணம் - சிவனது அநாதிமுறைமையான பழமை. அஃதாவது சிவபெருமான் அளவற்ற காலமாக ஆன்மாக்களுக்கு இயற்றி வரும் பழமையான திருவருட்செயல் முறையினைக் குறிக்கும் பகுதி ஆகும்.

1. நமச்சிவாய - தூல பஞ்சாட்சரம்; பஞ்சாட்சரத்தின் பெருமையினைத் தமிழ் வேதம் 'வேத நான்கினும் மெய்ப்பொருளாவது' என்றும், 'நற்றுணை யாவது' என்றும், 'நாவினுக் கருங்கலம்' என்றும் புகழ்ந்து பேசுகின்றது. நாதன் - ஐந்தெழுத்தின் ஒலியிலுள்ள நாத வடிவினன்; ஐந்தெழுத்தின் பொருளாயுள்ள தலைவன்; நாத தத்துவ முதல்வன் எனினுமாம். தாள் - அருளாற்றல்.

3. கோகழி - (கோ - பெரிய, கழி - துறை) திருப்பெருந்துறை; (கோ - பசுத்தன்மை, கழி - கழிதல்) இப்பொருளில் திருவாவடுதுறையுமாம். மணி - மாணிக்கம். குருமணி - நிறமுள்ள மாணிக்கம் போன்ற இறைவன்.

4. ஆகமம் - சிவாகமப் பொருள்; (சிவாகமம் - ஆன்மாக்களுக்கு மலநாசத்தைச் செய்து சிவஞானத்தை அளிப்பது). அண்ணிப்பான் - அணுகி அருள் புரிபவன்.

5. ஏகன் - எங்கும் நிறைந்தவன்.

6. வேகம் கெடுத்து - மனவிருத்திகளின் வேகத்தை ஒடுக்கி.

பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க !
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க !
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க !
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க !
ஈசனடி போற்றி ! எந்தை அடிபோற்றி !
தேசனடி போற்றி ! சிவன்சே வடிபோற்றி !
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி !
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி !
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி !
ஆராத இன்பம் அருளுமலை போற்றி !
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
**அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்**
சிந்தை மகிழச் **சிவபுரா ணந்தன்னை**
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான் :
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி

---

7. பிஞ்ஞகன் - தலைக்கோலமுடையவன்.

8. புறத்தார் - தன்னை வழிபடாத அயலார்; புறச்சமயிகள். சேயோன் - (அணுகவொண்ணாத) தூரத்திலுள்ளவன்.

9. உள் - உள்ளம். கழல் - திருவடி.

10. சிரங்குவிவார் - சிரசின்மேல் கைகுவித்து வணங்குவார்.

11. ஈசன் - (அனைத்தையும்) ஆள்பவன். எந்தை - என் தந்தை.

12. தேசன் - ஒளிவடிவினன்.

13. நேயம் - உள்ளன்பு; பத்தியுமாம். நிமலன் - மலமில்லாதவன்; பரிசுத்தன்.

14. மாயப்பிறப்பு - வஞ்சனை, பொய் முதலியவற்றிற்கு இருப்பிடமான பிறவி. மன்னன் – நிலைபெற்றவன்.

15. தேவன் - தலைவன்; இனிமையன்; ஒளியுருவினனுமாம்.

16. ஆராத - தெளியாத.

17. சிவனவன் - முழுமுதற் கடவுள்.

18. அருள் - திருவருள்.

19. வணங்கி - வணங்ங்கி என ஒற்றளபெடுத்தது.

20. முந்தைவினை - ஊழ்வினை. ஓய - கெட. யான் உரைப்பன் - நான் சொல்லுவேன். இ : சாரியை.

21. கருணைக்கண் - அருள் நோக்கம்.

22. எழில் - அழகு. கழல் - திருவடி.

விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்! விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை இலாதானே! நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்;
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்; எம்பெருமான்!
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்;
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்
ஐயா! எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே!
வெய்யாய்! தணியாய்! இயமான னும்விமலா!
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே!
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே!
ஆக்கம் அளவிறுதி இல்லாய்! அனைத்துலகும்
ஆக்குவாய்; காப்பாய்; அழிப்பாய்; அருள்தருவாய்;

---

24. எண் இறந்து - அளவு கடந்து நிற்கும்:

26. பூடு - பூண்டு; அடர்ந்த புற்செடியுமாம்.

27. விருகம் - மிருகம்: விலங்கு. பல் - பல; இந்த அடைமொழியை எங்கும் கூட்டுக.

30. தாவரம் - அசையாப் பொருள். சங்கமம் - அசையும் பொருள்.

31. இளைத்தேன் - அலுத்தேன்.

33. ஓங்காரம் - ஒலிகட்கு முதலாய் எங்கும் நிறைந்த ஓசை "ஓசை யொலியெலாமானாய் நீயே" என்பது அப்பர் தேவாரம்.

34. விமலா - மலத்தினின்றும் நீங்கியவனே. விடைப்பாகா - இடபவாகனனே.

36. வெய்யாய் - ஞாயிறு வடிவானவனே. தணியாய் - திங்கள் வடிவானவனே. இயமானன் - ஆன்மா.

39. இல்லாதேன் - இல்லாதேனுக்கு.

40. நல் - பெரும்பயன் தரவல்ல,

41. ஆக்கம் - தோற்றம். அளவு - திதி அல்லது நிலை.

போக்குவாய் ; என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பில் ;
நாற்றத்தின் நேரியாய் ! சேயாய் ! நணியானே !
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே !
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் ! விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் ; எம்பெருமான் ! வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா ! உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி

---

43. தொழும்பு - அடிமை.

44. நாற்றம் - பூவின் மணம். நேரியாய் - நுட்பமாய்ப் பொருந்தியவனே.

45. மாற்றம் - உரை. கழிய - அப்பாற்பட. மறையோனே - இரகசியப் பொருளாய் உள்ளவனே.

46. கன்னல் - சர்க்கரை. நெய் - தேன்.

47. தேன் - இங்கு இன்பம். ஊறி - ஊற.

49. நிறங்கள் ஓர் ஐந்துடையாய் - (ஈசானம் முதலிய ஐந்து திருமுகங்களிலும்) வெண்மை முதலிய ஐந்து நிறங்களை உடையவனே இறைவன் ஐம்பூதங்களிலும் கலந்திருத்தலின் அவற்றிற்குரிய ஐந்து நிறங்களும் இங்கே கூறப்பெற்றன.

51. மாய இருள் - மாயை ; இருள் மாய - இருளாகிய ஆணவம் மாயும் வண்ணம் என்று உரைப்பாரும் உளர். ஐ : சாரியை.

52. அறம் பாவம்-புண்ணிய பாவங்கள்; நல்வினை தீவினைகளுமாம்.

53. வழுக்கு - மாசு.

54. மலம் - கழிவுப்பொருள். குடிலை - குடிசையை. உடலை.

55. மலங்க - கலங்க புலன் ஐந்து - ஐம்பொறி அறிவு ; அவை சுவை. ஒளி. ஊறு. ஓசை. நாற்றம் என்பன.

56. விலங்கு - (உலக ஆசையினின்றும்) விலகிய.

57. கசிந்து - அழுது.

நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
**தாயிற் சிறந்த தயாவான தத்துவனே !**
மாசற்ற சோதி ! மலர்ந்த மலர்ச்சுடரே !
தேசனே ! தேனார் அமுதே ! சிவபுரனே !
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே !
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே !
ஆரா அமுதே ! அளவிலாப் பெம்மானே !
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே !
நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்றானே !
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே !
அன்பருக் கன்பனே ! யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே ! துன்னிருளே ! தோன்றாப் பெருமையனே !
ஆதியனே ! அந்தம் நடுவாகி அல்லானே !
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே !
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்

---

59. நிலந்தன்மேல் வந்தருளி - இந்நிலவுலகத்தே (அருட்குருவாய்) எழுந்தருளி வந்து.

60. நாய், உடையானைச் சார்ந்து ஒழுகும் குணமுடையது ; அவ்வாறு தாம் இன்மையின், 'நாயிற்கடையாய்' என்றார்.

61. தயாவான - கருணை வடிவான. தத்துவனே - உண்மையனே.

63. தேசன் - ஒளிவடிவினன் ; ஆசிரியனுமாம். தேன் - இங்கு இனிமை.

64. பாரிக்கும் - வளர்க்கும். ஆரியனே - பேரறிவுடையோனே ; பூசிக்கத்தகுந்தவனே.

65. நேச அருள் - அன்போடு கூடிய அருள்.

66. பேர் ஆறே - (வற்றாதோடும்) பெரிய ஆறு போன்றவனே.

67. ஆரா அமுதே - (உண்ண உண்ணத்) தெவிட்டாத இனிய அமுதம் போன்றவனே.

68. ஓராதார் - ஆராயாதார்.

72. துன்னிருளே - நிறைந்த இருள்போன்றவனே.

73. ஆதி - முதல். அந்தம் - இறுதி. அல்லானே - இல்லாதவனே.

74. ஈர்த்து - இழுத்து. இது வலிய ஆட்கொள்ளுதலைக் குறித்தது.

75. கூர்த்த - தீவிரமான.

நோக்கரிய நோக்கே! நுணுக்கரிய நுண்ணுணர்வே !
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே !
காக்குமெங் காவலனே ! காண்பரிய பேரொளியே !
ஆற்றின்ப வெள்ளமே ! அத்தா ! மிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே ! தேற்றத் தெளிவே ! என் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே ! உடையானே !
வேற்று விகார விடக்குரம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் ; எம் மையா ! அரனே ! ஓ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே !
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே !

---

76. நோக்கரிய நோக்கு - சுட்டுணர்வால் அறியப்படாத பொருள். நுணுக்கரிய நுண்ணுணர்வே - நுட்பத்தில் அதிநுட்பமான அநுபவப் பொருளாயுள்ளவனே; நோக்கு அறிவையும், உணர்வு அனுபவ நுட்பத்தையும் குறிக்கும் என்பர்.

77. புணர்வு - கலந்திருத்தல்.

79. அத்தா - (சிறந்த) தலைவனே. மிக்காய் - அப்பாற்பட்டவனாய்.

81. மாற்றம் - மாறுபாடு.

82. தேற்றன் - தெள்ளியன்.

83. ஊற்றான - நீர் ஊற்றுப்போல் சுரக்கின்ற.

84. விகார விடக்குரம்பு - ஊனாலாகிய விகார உடல்.

85. ஐயா - ஐயனே; அரனே - அஞ்ஞானத்தைப் போக்குபவனே; துன்பங்களை நீக்குபவனே. ஓ இரக்கக்குறிப்பு உணர்த்தும் இடைச்சொல்.

86. பொய் - பொய்யான சொல், செயல் முதலியன. மெய்யானார் - சிவமாந்தன்மை எய்தியவர்; அறிவே வடிவானவர்; ஆன்ம அறிவு கெட்டு ஞான வடிவாய் நின்றவர்.

88. குரம்பை - இங்கு உடல். கட்டழித்தல் - முற்றிலும் அழித்தல்.

89. நள்ளிருள் - நடுவிருள்; அழிக்குங்காலம்; அறியாமையாகிய இருளுமாம். நட்டம் - நடனம். பயின்று - மிகுந்து.

தில்லையுட் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!
அல்லற் பிறவி அறுப்பானே! ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
**சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்**
**செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஏத்தப் பணிந்து.**

திருச்சிற்றம்பலம்

---

உடையா ளுன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்கும்அரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே.

**—திருவாசகம்**

---

90. தென்பாண்டி நாட்டானே - இங்கு "ஆடக மதுரை அரசே போற்றி" "தென்னாடுடைய சிவனே போற்றி" என்பன கருதற்பாலன.

92. சொல்லி - துதித்து. கீழ் - மீது.

93. சொல்லுவார் - துதிப்பவர்.

94. செல்வர் - செல்வார்கள். உள்ளார் - இன்புற்று இருப்பார்கள். சொல்லுவார் சிவபுரத்தின் செல்வர்; பல்லோரும் ஏத்தப் பணிந்து சிவனடிக்கீழ் உள்ளார் என முடிக்க.

## சேந்தனார்

### திருப்பல்லாண்டு

**பஞ்சமம் [9-ஆம் திருமுறை]**

கோயில்

திருச்சிற்றம்பலம்

மன்னுக தில்லை; வளர்கநம்
பத்தர்கள்; வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே
புகுந்து புவனியெல் லாம்விளங்க
அன்ன நடைமட வாளுமை
கோனடி யோமுக் கருள்புரிந்து
பின்னைப்பிறவி அறுக்க நெறிதந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே. 1

மிண்டு மனத்தவர் போமின்கள்;
மெய்யடியார்கள் விரைந்து வம்மின்;
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி
ஈசற்காட் செய்மின் குழாம்புகுந்(து)
அண்டங் கடந்த பொருள்அள(வு)
இல்லதோர் ஆனந்த வெள்ளப்பொருள்
பண்டுமின் றும்என்றும் உள்ளபொருள்
என்றே பல்லாண்டு கூறுதுமே. 2

---

1. மன்னுக - நிலைபெறுக. தில்லை - சிதம்பரம். மடவாள் உமை - மாதாகிய உமாதேவி. அடியோமுக்கு - அடியோங்களுக்கு. பின்னைப் பிறவி - இனிவரும் பிறப்பு. நெறி - முத்திநெறி; ஞானமார்க்கமுமாகும். பல்லாண்டு கூறுதுமே - பல்லாண்டுகள் வாழ்வீராக என்று வாழ்த்துக் கூறுவோம். எக்காலத்தும் அழிவில்லாத சிவபெருமானுக்குப் பல்லாண்டு சொல்வது உபசாரமாகும்.

2. மிண்டு மனத்தவர் - மாறுபடுகின்ற மனத்தையுடையவர். மிண்டு, மதமுமாகும். கொண்டும் - (சிவ வழிபாட்டில் பிறர் அனுபவத்தைக்) கேட்டும். கொடுத்தும் - (சிவ வழிபாட்டில் தம் அனுபவத்தைப் பிறருக்குச்) சொல்லியும். குடிகுடி - வழிவழியாக. என்றே - என்று கூறிக்கொண்டே.

நிட்டையி லாவுடல் நீத்தென்னை
யாண்ட நிகரிலா வண்ணங்களும்
சிட்டன் சிவனடி யாரைச்
சீராட்டுந் திறங்களுமே சிந்தித்(து)
அட்ட மூர்த்திக்கென் அகநெக
வூறும் அமிர்தினுக்(கு) ஆலநிழற்
பட்டனுக் கென்னைத்தன் பாற்படுத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 3

சொல்லாண்ட சுருதிப் பொருள்சோ
தித்த தூய்மனத் தொண்டருள்ளீர்!
சில்லாண் டிற்சிதை யுஞ்சில
தேவர் சிறுநெறி சேராமே
வில்லாண் டகன கத்திரள்
மேருவில் விடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 4

புரந்தரன் மாலயன் பூசலிட்(டு)
ஓலமிட் டின்னம் புகலரிதாய்
இரந்திரந் தழைப்பஎன் னுயிராண்ட
கோவினுக்(கு) என்செய வல்லமென்றும்

---

3. நிட்டை: நிஷ்டை; சிவோகம்பாவனை. நீத்து - நீங்கும்படி செய்து. வண்ணங்களும் - தன்மைகளும், சிட்டன் - மேலோன். சீராட்டும் - பெருமைப்படுத்தும். அட்டமூர்த்தி - மண், நீர், தீ, காற்று, வெளி, சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டுருக்கொண்ட மூர்த்தி ; சிவபெருமான். அகம் - மனம். நெக - கசியும்படி. ஆல நிழற்பட்டன் - கல்லாலமர நிழலில் எழுந்தருளிய தட்சிணாமூர்த்தி. தன்பாற்படுத்தான் - தன்வயமாக்கிக்கொண்டவன்.

4. சொல் ஆண்ட - புகழ்ந்து பேசப்பட்ட. சிறுநெறி - புன்சமயம். வில் - ஒளி. மேருவில் - மேரு மலையை வில்லாகக் கொண்ட. விடங்கன் - அழகன். பதம் - சொல்லின் அளவை.

5. புரந்தரன் - இந்திரன். பூசல் இட்டு - சண்டையிட்டு. ஓலமிட்டு - முறையிட்டு. புகல் - தஞ்சம் என்று அடைய. இரந்து இரந்து - கெஞ்சிக் கெஞ்சி. அழைப்ப - கூப்பிடவும் (வெளிப்படாமல்). என் உயிர் ஆண்ட - என்னுடைய உயிரைத் தன்வயப்படுத்தின. கோவி

கரந்துங் கரவாத கற்பக
　　னாகிக் கரையில் கருணைக்கடல்
பரந்தும் நிரந்தும் வரம்பிலாப்
　　பாங்கற்கே பல்லாண்டு கூறுதுமே. 5

சேவிக்க வந்(து)அயன் இந்திரன்
　　செங்கண்மால் எங்குந் திசைதிசையன
கூவிக் கவர்ந்து நெருங்கிக்
　　குழாங்குழா மாய்நின்று கூத்தாடும்
ஆவிக் கமுதைஎன் ஆர்வத்
　　தனத்தினை அப்பனை ஒப்பமரர்
பாவிக்கும் பாவகத் தப்புறத்
　　தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 6

சீரும் திருவும் பொலியச்
　　சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்
　　றேன் ;பெற்ற தார்பெறு வாருலகில்?
ஊரும் உலகுங் கழற
　　உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும்
　　பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே. 7

---

னுக்கு - இறைவனுக்கு. என் - என்ன (கைம்மாறு). கரந்தும் - தான் வெளிப்படாமல் இருந்தும். கரவாத - (அடியவன் விரும்பியவற்றை) ஒளியாது கொடுத்தருளும். கற்பகனாகி - கற்பகத்தரு போல்பவனாகி. பரந்தும் - (எப்பொருள்களிடத்தும்) பரவியும். நிரந்தும்; (எங்கும்) நிறைந்தும். வரம்பு - எல்லை. பாங்கற்கு - அழகனுக்கு; நன்மையுடையவனுக்கு.

6. சேவிக்க - தரிசிக்க. திசை திசையன - திக்குகள் தோறும். கூவி - (அரஅர என்று கூறும்) இரைச்சலிட்டு. கவர்ந்து - (ஒருவர் இடத்தை ஒருவர்) ஆக்கிரமித்து. ஆர்வத் தனத்தினை - பேரன்பாகிய செல்வத்தையுடையவனை. ஒப்பு பாவிக்கும் - உவமை கூற நினைக்கின்ற. பாவகத்து - நினைப்பிற்கு. பிரதிபேதம் : **ஒப்பமரா.**

7. சீரும் - சிறப்பும். திருவும் - திருவருட்செல்வமும். ஆரும் பெறாத அறிவு - வேறொருவரும் பெற முடியாத அறிவினை. பெற்றது - அடியவன் பெற்ற பேற்றை. ஊரும் - ஊரிலுள்ளவர்களும். கழற -

**சே**லுங் கயலுந் திளைக்குங்
    கண்ணார்இளங் கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்
    குமென்று புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியா
    நெறிதந்து வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்துநின்
    றானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 8

**பா**லுக்குப் பாலகன் வேண்டி
    அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள்
    செய்தவன் மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற
    சிற்றம் பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல்
    லானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 9

**தா**தையைத் தாளற வீசிய
    சண்டிக்(கு) இவ்வண்டத் தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற்
    கோயிலும் போனகமும் அருளிச்

---

புகழ்ந்து பேச. ஆள் - அடிமைகள் என்று. பாரும் - உலகத்திலுள்ளவர்களும். விசும்பும் - ஆகாயத்திலுள்ளவர்களும். அறியும் பரிசு - அறியும் வண்ணம். நாம் உழறி - நாம் நாக்குளறி.

8. சேல் - சேல்மீன்; இஃது ஒருவகை மீன். திளைக்கும் - (அழகில்) ஒன்றுசேர்ந்தாற்போன்ற. கண்ணார் - கண்களையுடைய மாதரது. கொங்கையில் - கொங்கையில் அணிந்த. பொடி - விபூதி. புண்ணியர் - அடியார்கள். போற்றிசைப்ப - துதிக்க. மாதர் மார்பில் அணிந்த குங்குமம் காமுகர்க்கு அம்மாதர்மீது ஆசையைப் பெருக்குவதுபோன்று சிவபெருமான் திருமார்பில் அணிந்த விபூதி அடியார்களுக்கு அவர்மீது அன்பைப் பெருக்கும் தன்மையதாம். மாலும் அயனும் அறியாநெறி - திருவருள் நெறி.

9. பாலகன் - சிறுவனாகிய உபமன்னியு முனிவர். அன்று - அக்காலத்தில். ஆலிக்கும் - களிக்கின்ற. அந்தணர் - தீட்சிதர்கள். பாலித்து - அருள்புரிந்து. நட்டம் பயில - நடனம்புரிய.

சோதி மணிமுடித் தாமமும்
நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 10

குழலொலி யாழொலி கூத்தொலி
ஏத்தொலி எங்குங்குழாம் பெருகி
விழவொலி விண்ணளவுஞ் சென்று
விம்மி மிகுதிரு வாரூரில்
மழவிடை யாற்கு வழிவழி
யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடி யாரொடுங் கூடிஎம்
மானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 11

ஆரார் வந்தார் அமரர்
குழாத்தில் அணியுடைய **ஆதிரைநாள்**
நாரா யணனொடு நான்முகன்
அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்
குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும்
ஆடியும் பல்லாண்டு கூறுதுமே. 12

---

10. தாதை - தந்தை; விசாரசருமர். தாள் - கால்; சண்டி - சண்டேசுர நாயனார். அண்டத்தொடும் - தேவர்களோடும். போனகம் - உணவு. தாமம் - மாலை. நாயகம் - தலைமை. பாதகம் - (தந்தையின் காலை வெட்டிய) பாவச்செயல். பரிசு - வெகுமதி. வைத்தானுக்கே - கொடுத்தவனுக்கே.

11. ஏத்து ஒலி - துதி செய்யும் ஓசை. குழாம் - கூட்டமாக. விழவு - திருவிழா. விம்மி மிகு - மேன்மேலும் பெருகி அதிகரிக்கின்ற. மழவிடையார்க்கு - இளமை பொருந்திய இடபத்தை வாகனமாக உடைய சிவபெருமானுக்கு. வழி வழி ஆளாய் - பரம்பரையாக அடிமை பூண்ட. மணம் செய் குடிப்பிறந்த - ஆடவரும் மகளிரும் மணம் செய்துகொண்ட குடும்பத்தில் பிறந்த.

12. ஆர் ஆர் வந்தார் - யார் யார் வந்தார். அணி - அழகு. ஆதிரை நாள் - (மார்கழி மதி நிறைந்த) திருவாதிரை நாளில். அங்கி - அக்கினி தேவன். இரவி - சூரியன். தேர் ஆர் - தேர் ஓடும். பார் ஆர் -

எந்தை எந்தாய் சுற்றமுற்றும்
எமக்கமு தாம்எம்பி ரான்என்றென்று
சிந்தை செய்யுஞ் சிவன்சீ
ரடியார் அடிநாய் செப்புறை
அந்தமில் ஆனந்தச் சேந்தன்
எனைப்புகுந் தாண்டுகொண் டாருயிர்மேல்
பந்தம் பிரியப் பரிந்தவ
னேயென்று பல்லாண்டு கூறுதுமே. 13

திருச்சிற்றம்பலம்

— o —

பூமி முழுதும் நிறைந்த. தொல்புகழ் - (சிவபெருமானுடைய) பழமையான புகழை. பாடியும் ஆடியும் - பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இருக்க (நாம்).

13. எந்தை - எமது தந்தை. எம்தாய் - எமது தாய். அமுதம் - ஆம் - இன்பந்தரும். என்று என்றுமே - என்று எப்பொழுதும். சீர் - அடியார் அடிநாய் - மெய்யடியார்களுக்கு அடிமை செய்யும் நாய் போன்றவனாகிய. செப்புறை - இது சேந்தனாருடைய ஊர் என்பர். சேந்தன் - சேந்தனாகிய யான் (கூறுவது யாதெனில்) எனைப்புகுந்து - எனது உடலில் புகுந்து. பந்தம் பிரிய - மலக்கட்டுகள் (பிறவித்தளை) ஒழிய. ஆர் உயிர்மேல் பரிந்தவன் - (என் ஆருயிர்மீது) இரக்கங் கொண்டு அருள் புரிந்தவன். பிரதிபேதம்: செப்புரை.

உ

சிவ சிவ

வாழி திருமன்றங் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி அவனை வணங்கு முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய்.

—சிதம்பரச் செய்யுட் கோவை

உ
சிவ சிவ
செந்திலாண்டவன் துணை

# ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
# அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
# சிதம்பரத்தில் நிறுவியுள்ள
# தரும சாசனங்களின் விவரம்

## 1

## Sri Arulnandi Sivacharya Swamigal Swagnana Siddhiyar Lectureship Endowment Rs. 15,000.

BY

His Holiness Sri-la-sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Tirupanandal in memory of the late Sri-la-sri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avergal, to encourage the study of and the spread of learning in the Saiva Siddhanta Sastras.

1. This Endowment was founded by **His Holiness Sri-la-sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Tirupanandal** in memory of his predecessor the late Sri-la-sri Kasivasi Swaminatha Tambiran Swamigal Avergal to encourage the study of and the spread of learning in Saiva Siddhanta.

2. This Endowment for the lectureship consists of Non-terminable Government Promissory Notes of the face value of **Rs. 15,000.** The interest on this investment shall be utilised for the honorarium for a series of lectures, not less than four in number annually at the Benares Hindu University and the Allahabad University. The honorarium shall be Rs. 400 unless, revised later,

with the consent of the Donor and with a view to lectures being given in other Indian University centres. Such excess of income as there may be, over the honorarium fixed will be added every year to the corpus of the fund. Should at any time the Syndicate consider that no applicant has shown sufficient ability to justify the delivery of the lectures in that particular year or years, the amount of interest accrued shall be added to the corpus of the fund.

3. The terms and conditions of the lectureship are as follows:

(i) The course of lectures which shall be not less than four, three in the Benares Hindu University and one in the Allahabad University, shall be delivered annually at the University centres fixed by the University on a subject explaining the principles of Saiva Siddhanta. The increase in the number of lectures shall be subject to the conditions in para 5 infra.

(ii) The lecturer shall be appointed every year by the Syndicate of the Annamalai University either from among the Hindu members of the staff of the University or other Hindus, experts in the Saiva Siddhanta Phliosophy. Every year there shall be a new lecturer. The lecturer once selected may have a second turn only after the lapse of 12 years.

(iii) The lecturer shall be chosen irrespective of sex or caste.

(iv) The lecturer should within a month after the delivery of the lectures present to the Annamalai University as well as the Donor of this Endowment and his successors in interest, a copy of each of his lectures. The University may print and publish the lectures at the discretion of the Syndicate.

(v) The lectures shall be the result of a deep study of the sutras of (a) Sivagnana Siddhiyar, both Para-pakkam and Supakkam and the six old commentaries on the Siddhiyar and (b) Sivaprakasam of Sri Umapathi Sivachariar.

(vi) The lectures shall ordinarily be arranged in the month of August each year and the dates of the lectures shall be fixed in consultation with the Benares Hindu University and the Allahabad University immediately before or after the Dasarah Holidays.

(vii) The lecturer shall bring on his return a pot of the holy waters of the Ganges for presentation at the Lord Sri Nataraja Shrine at Chidambaram for abishekam and intimate to the Donor his having done so when he sends a copy of his lecture as required in clause 3(iv) supra.

(viii) The honorarium shall be paid either in cash or by cheque.

4. It shall be competent for the Syndicate of the Annamalai University to invest in any Government or other trust securities (1) sums available from year to year for investment from the interest in excess over the honorarium as also (2) the capital amount of the investment in case the Government Securities in which the amount is now invested are tendered for payment by Government.

5. If in the process of investment the face value of the Paper increases and an enhancement of income results either by addition of unspent amounts or be reinvestment, such additional income shall be utilised to increase tha number of University centres at which the lectures will be delivered and consequently the honorarium for the lecturer.

6. The Syndicate shall at the end of each year communicate to the Donor or to his successors-in-interest the name and address of the lecturer and the honorarium paid and if in any year no lecture is delivered the amount at credit at the end of the year and shall also publish the accounts in an important Tamil or English Daily News-paper.

*(Sd.) Kasivasi Arulnandi Tambiran.*

---

*Note*: **The deed was approved by the Annamalai University in its Syndicate meeting held on 29th September '44 and Senate held on 12th December 1944.**

## 2

## Sri-la-sri Kasivasi Adi Kumaragurupara Swamigal Memorial Saiva Siddanta Scholarship (at the Annamalai University) endowment Rs. 30,000.

This endowment is founded by His Holiness Sri-la-sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avl. of Sri Kasi Mutt Tirupanandal in green memory of the illustrious founder of Sri Kasi Mutt at Benares, Sri-la-sri Kasivàsi Adi Kumaragurupara Swamigal, a great Tambiran-Scholar who spread Tamil Culture from Benares to Rameswaram in the 17th centuary when the Moghul Empire was at its zenith under Emperor Aurangazeb. This endowment is intendedf or the promotion and spread of Saiva Siddhanta Philosophy and for the award of Scholarship therefor to the pupils of the Annamalai University under the conditions given below. The Endowment shall be styled as "Sri-la-sri Kasivasi Adi Kumaragurupara Swamigal Memorial Saiva Siddhanta Schlarship Endowment."

2. The Endowment shall consist of Rs. 30,000 (Rupees Thirty Thousand) in cash. The administration of the fund

shall be vested in the Annamalai University. The University shall invest this amount in interest yielding Government Securities.

3. The interest accruing on the fund shall be utilised for the award of six scholarships of the value of Rs. 135 (One Hundred and thirtyfive) each in nine equal monthly instalments of Rs. 15 to the poor deserving students in the Annamalai University irrespective of sex, caste or creed. Four of the scholarships shall be awarded to the students who take up Saiva Siddhanta Pulavar Course and the remaining two to the students of the Arts Course whose second language is Tamil and who take up Saiva Siddhanta Philosophy as their optional subject. In the fiirst year of the award two students shall be selected out of those taking up Pulavar Course and one out of those taking up Saiva Siddhanta Philosophy in the Arts Course. In the second year of the award another set of 3 students as above shall be selected. Thus from the second year onwards the number of scholarships shall be two years provided the students' first year progress is satisfactory and they continue the study for the second year.

4. It shall be competent to the Vice-Chancellor of the University to declare that the holder of any scholarship has forfeited it for misconduct, irregular attendance, or unsatisfactory progress in his studies. In his place a deserving candidate shall be selected and the scholarship awarded him. The decision oJ the Vice-Chancellor shall be final.

5. If any year the scholarship be not awarded, or after having been awarded for some time it is forfeited by any of the scholarship holder the unexpended scholarship amount along with the balance of interest on the endowment fund after award of the scholarships shall be added to the corpus of the fund.

6. When the original endowment along with the added capital accumalates to sufficient sum, the University shall, at

its discretion, raise the amount of the scholarshiip or increase the number of scholarships as circumstances permit.

7. If any surplus is left behind after the conditions in the previous clause is satisfied, it may be utilised for the purchase of Sivagnana Siddhiar for the philosophy course which may be distributed free to the students to whom scholarships are awarded.

8. The Syndicate shall at the end of each year communicate to the Donor and to his successors-in-interest an account of receipts and expenditure and the names of the students to whom the scholarships are awarded.

9. The income from the endowment and the accumulations thereto shall not be diverted to any other purpose than the one intended by the Donor.

(*Sd.*) *Kasivasi Arulnandhi Tambiran.*

---

**Note.—Approved by the Annamalai University in its Syndicate meeting held on** *17-1-1947* **and Senate held on** *29-3-1947*.

## 3

## Sri Adi Kumaragurupara Swamigal Kasi Mutt Feeding Charity at Chidambaram Rs. 35,000.

This endowment is founded by His Holiness Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal, Tirupanandal in revered memory of the illustrious Founder of Sri Kasi Mutt at Benares, Sri Adi Kumaragurupara Swamigal, who spread Tamil Culture from Cape Comorin to Benares in the seventeenth century and who stayed at Chidambaram for some time and sang *Chidambara Mummanikkovai and Seyyutkovai in Praise of Lord Nataraja.* This endowment is styled as *"Kumaragurupara Swamigal Kasi Mutt Feeding Charity."*

2. This endowment consists of Rs. 35,000 (Rupees thirtyfive thousands) invested in Government Securities fetching 3 percent interest Conversion Loan of 1946 Government Bonds Nos. CA. 093655, CA. 093678, CA. 093679 and CA. 093680 (Stock Certificate No. MS. 1914) and its administration shall vest in the Donor and his successors-in-interest.

3. This endowment has been made for free meals to be provided to poor deserving students of V and VI forms in the High Schools at Chidambaram in our Kasi Mutt building at Chidambaram, sacred to his memory as his residence. The students seeking the said benefit should be able to recite "*Kandarkalivenba*". Such students have to apply to the Donor of Tirupanandal through their Head Masters, and the final selection will be made by the Donor.

4. The number of students admitted for such free meals every year as stated above is now expected to be 10. It may be liable to vary on the income that could be actually derived from the Capital. Any student once failing in the annual examination or found not to be of exemplary charecter will not be eligible for the said provision of free meals either in the same or succeeding year.

5. This endowment shall not be diverted to any purpose other than the one for which it is intended.

*Dated 3-7-1948* (*Sd.*) *Kasivasi Arulnandi Tambiran*

---

**Registered at Tiruvadamarudur Sub Registrar's Office on 5th July 1948 (on General stamp of Rs. 525) as No. 35 of 1948 Book No. 4 Volume 42 pages 163—166.**

# 4

## Sri Adi Kumaragurupara Swamigal Memorial Feeding Charity At Chidambaram Rs. 12,000

This endowment is founded by His Holiness Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal in revered memory of the illustrious Founder of Sri Kasi Mutt at Benares, Sri Adi Kumaragurupara Swamigal, who spread Tamil Culture from Cape Comorin to Benares in the 17th century and who stayed at Chidambaram for some time and sang *Chidambara Mummanikkovai and Seyyutkovai* in praise of *Lord Nataraja*. This endowment is styled as "*Kumaragurupara Swamigal Memorial Feeding Charity*."

2. This endowment consists of Government Promissory Notes to the face value of Rs 12,000 (Rupees twelve thousands) invested in 3% Defence Loan 1951—54 (Stock Certificate—Indian Posts & Telegraphs Department, Calcutta, No. S. P. C. I (B) m/1951—54 dated 15–9–1942, now in the custody of the Accountant General, Posts and Telegraphs Calcutta) The administration shall vest in the Donor and his Successors-in-interest.

3. The annual interest accruing on the Government Promissory Notes shall be utilised for the feeding of Brahmins and Maheswarapuja (Saivite feeding) on two days every year i. e., on *Ani Uthiram* and *Margali Thiruvadirai* days, in our Kasi Mutt building at Chidambaram.

4. The feeding shall be in accordance with the Thitta japtha prepared at the time of celebration which will depend upon the prices then current.

5. The charity shall be conducted every year by the Donor and his Successors-in-interest. This endowment shall not be

diverted to any purpose other than those intended by the Donor.

*Dated 26—5—48* *(Sd) Kasivasi Arulnandi Tambiran.*

***Note*:** The above Deed has been registered in the Sub Registrar's Office, Tiruvadamarudur (on General Stamp of Rs. 180) on 27—5—1948 as Document No. 30 of 1948 Book. 4, Volume 42 Pages 155—156.

## 5

## ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ரூ. 60,000 [சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர்.]

இத்தருமம் ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமாரசுவாமி மடத்தை ஸ்தாபித்தருளிய ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளுக்குச் செந்திலாண்டவன் திருவருள் பாலித்தமையை நினைந்து உய்தற்பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் ஸ்ரீ செந்திலாண்டவன் திருப்பெயரால் ஏற்படுத்தப்பெற்றது.

ஐந்து வயதில் ஸ்ரீ செந்திலாண்டவன் திருவருளால் ஊமை நீங்கப்பெற்றுக் கந்தர் கலிவெண்பா பாடியருளியும், மதுரையில் ஸ்ரீ மீனாட்சியம்மை மீது பிள்ளைத்தமிழ் பாடி அம்மையாரால் முத்தாரம் அணியப்பெற்றும், திருமலை நாயக்க மன்னன் வேண்ட, மன்னன் முதல் உலகிலுள்ள மக்கள் அனைவருக்கும் உலகறிவு ஊட்டுவான் நீதிநெறி விளக்கம் அருளியும், சிதம்பரச் செய்யுட்கோவை, மும்மணிக்கோவை பாடியருளியும், இன்னோரன்ன செயற்கரிய செய்தருளிய முனிவர்பெருமான் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆவார்கள்.

2. இந்தத் தருமம் சிதம்பரத்தில் தீட்சதர்களுக்கும், மதுரையில் ஏழைகளுக்கும், திருச்செந்தூரில் முக்காணி பிராமணர்களுக்கும் பிரதி வருடம் ஆவணி மூல தினத்தில் அன்னம் அளிக்க நிறுவப்பெற்றது. இத்தருமத்திற்கு மேற்கண்ட மூன்று ஸ்தலங்களிலும் ஒவ்வொரு ஸ்தலத்திலும் ரூ. 500 வீதம்

ஆக மொத்தம் ரூபாய் 1500 (ஆயிரத்து ஐந்நூறு) செலவிடப்படும். பாக்கித் தொகையை இத்தருமம் நிறுவிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமிகள் அவர்களாலும் அவர்களுக்குப்பின் வரும் உரிமை உள்ளவர்களாலும் உசிதம்போல் இதர இடங்களில் இத்தகைய தருமத்திற்குச் செலவிடப்படும்.

3. ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் பட்டா மிராசுடன் அனுபவித்து வருகிற தஞ்சாவூர் ஜில்லா கும்பகோணம் தாலூகா முள்ளங்குடி வட்டம், முள்ளங்குடி கிராமத்தில் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிற A ஷெடியூலில் கண்ட நன்செய் ஏக்கர் 32, சென்ட் 1-ம் ஷை தாலூகா திருமங்கலக்குடி வட்டம் திருமங்கலக்குடி கிராமத்தில் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிற B ஷெடியூலில்கண்ட இனும் புன்செய் வாழைக் கொல்லை ஏக்கர் 1, சென்ட் 72-ம் ஆக நன்செய் புன்செய் (ஏக்கர் 33, சென்ட் 73) ஏக்கர் முப்பத்துமூன்று சென்ட் எழுபத்து மூன்றிலிருந்து கிடைக்கும் வருமானத்தால் இத்தருமம் நடத்தப்பெறும். இந்தச் சொத்தின் உத்தேச மதிப்பு ரூ. 60,000. உத்தேச வருட வருமானம் ரூ. 3,000.

4. இந்தச் சொத்துக்கள் இனியும் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அனுபவத்திலும், அவர்களுக்குப் பின் வரும் உரிமை உள்ளவர்கள் அனுபவத்திலும் இருந்துவர வேண்டியது.

5. இந்தச் சொத்தின் வருடாந்தர வரும்படியில் சர்க்கார் கிஸ்தி, கிராமச் சிப்பந்திகள் வகையரா சம்பளச் செலவுகள் கிராமச் சமுதாயம், மராமத்துச் செலவுகள், கிராம தேவதை உற்சவச் செலவுகள் முதலியன போக பாக்கித்தொகை மேலே 2-வது பாராவில் கண்டபடியுள்ள தருமத்திற்காகப் பயன்படுத்தப்பெறும்.

6. அந்தந்த வருட விலைவாசிக்குத் தகுந்தாற்போல் அன்னதானம் நடத்தப்பெறும். இந்த அன்னதானம் நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமை உள்ளவர்களாலும் நடத்தப்பெறும்.

7. இந்தத் தருமநிதி மேலே குறித்த தருமத்தைத் தவிர வேறு எந்தக்காரியத்திற்கும் உபயோகப்படுத்தப்படமாட்டாது.

Dated *27-1-49* (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudhur Sub Registrar's Office as No. 152 of 1940 Book No. 1 Volume 986 pages 423 to 426 dated 29—1—1949. (on General Stamp Rs. 900)

## 6

## சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு சேமவைப்பு ரூ. 5,000

திருவாதவூர்ச் சிவபாத்தியரும், பாண்டி நாட்டில் 775-825-ல் ஆண்ட அரிமர்த்தனன் எனும் முதலாம் வரகுண பாண்டியனுக்கு முதல் அமைச்சராகித் தென்னவன் பிரம ராயன் என்னும் பட்டம் ஏற்றவரும், திருப்பெருந்துறையிற் செழுமலர்க் குருந்தமேவிய சிவபெருமானின் அருள்பெற்று மாணிக்கவாசகர் எனும் தீட்சாநாமம் பெற்றவரும், ஆவணி மூலத்தில்-நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்தமை- மண் சுமந்து கூலிகொண்டு அக்கோவான் மொத்துண்டு பரகதி பாண்டியர்க்கு அருளியமை ஆகிய பல திருவிளையாடல்கள்—பாடும் பணிதான் கூடும் பொருட்டு இறைவனால் செய்யப்பெற்றவரும்,

" பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்
ஏனைப் புவனமு மெண்ணீங் குயிரும்
தானே வருத்துதுன் தமருகக் கரமே ;
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுன் அமைத்தபொற் கரமே ;
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே ;
ஈட்டிய வினைப்பயன் எவற்றையுங் மறைத்துநின்று
ஊட்டுவ தாகுநின் றூன்றிய பதமே ;

அடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே ;
இத்தொழி லொந்துநின் மெய்த்தொழி லாகப்
பாலுண் குழவி பசுங்குடர் பொருதென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட வையரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த !''

என்று ஆதி குமரகுருபர சுவாமிகள் சிதம்பர மும்மணிக் கோவையில் பாடியருளிய நலமலி தில்லையுள் கோலமார்தரு பொதுவினில் வருக' என இறைவன் ஏவ, அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை யம்பலத்தே கண்டவரும், ஈழ மன்னனது ஊமைப் பெண்ணைப் பேசுவித்துப் பௌத்தர்களை வாதில் வென்றவரும், பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே தேன் கலந்து பால் கலந்து நறுங்கனித் தீஞ்சுவை கலந்து ஊன்கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பது ஆகிய **திருவாசகம்** முழுமையும் சிவபெருமான் திருக்கரத்தால் எழுதப்பெற்ற பெருமையுடையவரும், **பாவை** பாடிய வாயால் **கோவை** பாடினவரும், 'பாவெனப் படுவது உன் பாட்டே' என்று புகழப்பெற்றவரும், 'அறிவாற் சிவனே' எனப் போற்றப்பெற்றவரும், ஆனி மாமகத்தில் செப்பரிய நாலெட்டில் தெய்வீகம் பெற்றவருமாகிய **ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருமானை** நினைவு கூர்தற்பொருட்டும், அவர் பாடியருளிய திருவாசகத்தை மாணவர் ஓதிப் பயன் அடைதற்பொருட்டும், **திருப்பனந்தாள் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்** நிறுவப்பெற்றது. இது **''சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு''** எனப் பெயர்பெறும்.

**2.** இதற்குரிய முதற்பொருள் நூற்றுக்கு ஆண்டொன்றுக்கு ரூ. 3/– வீதம் வட்டி தரக்கூடிய ரூ. 5000/– (ரூபா

ஐயாயிரம்) மதிப்புடைய சர்க்கார் கடன் பத்திரங்களில் — (அதாவது 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946-ல்) முதலீடு செய்யப்பெறும். இது சிதம்பரம் நகராட்சி மன்றத்தினரின் பரிபாலனத்தில் இருக்கும்.

3. இம்முதற்பொருளினின்றும் ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி ரூ. 150/– (ரூபா நூற்றைம்பது). இவ் வட்டித் தொகையினின்றும் ரூ. 135/– (ரூபா நூற்று முப்பத்தைந்து) பரிசாக அளிக்கப் பயன்படுத்தவேண்டும். எஞ்சிய தொகை பரிசுத் தேர்வு நடத்துதல் முதலிய செலவுகளுக்குத் தேவையிருப்பின் பயன்படுத்தவேண்டும்.

4. பரிசுக்குரிய கட்டுப்பாடுகளாவன :—

அ. சிதம்பரம் நகர ஆட்சி எல்லைக்குட்பட்ட உயர்நிலைக் கல்விக் கூடங்களில் 4, 5, 6 பாரங்களில் படிப்பவர்கட்கு ஆண், பெண், சாதி, மத, குல வேறுபாடின்றிப் பரிசுகள் வழங்கப் பெறும்.

ஆ. பரிசுகளுக்குப் போட்டியிடுபவர் கீழ்க்குறித்துள்ளவாறு திருவாசகத்தில் சிவபுராணத்தில் 32 அடிகளும், மற்றைய மூன்று அகவல்களில் (அதாவது 2, 3, 4-ல்) ஏதேனும் ஒன்றும், திருவெம்பாவை 20 பாடல்கள், திருச்சதகம் 10 பாடல்களையும் மனப்பாடஞ் செய்து சொற்பொருள் விளங்கும் வண்ணம் ஒப்புவிக்கவேண்டும். வாய்மொழியாகக் கேட்கும் வினாக்களுக்கும் விடையிறுத்தல் வேண்டும்.

தேர்வுப்பாடற் குறிப்பு :—

1. சிவபுராணம் அடி 1 முதல் 32 வரை
   ‘நமச்சிவாய வாஅழ்க’ என்பது முதல் ‘மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்’ என்பதுவரை
   அடிகள் 32

2. கீர்த்தித் திருவகவல் அடி 115 முதல் 146 வரை
   ‘அரியொடுபிரமற்கு’ என்பது முதல் ‘ஒலிதருகயிலையுயர்கிழவோனே’ என்பது வரை அடிகள் 32

3. திருவண்டப்பகுதி அடி 1 முதல் 28 வரை
'அண்டப் பகுதியின்' என்பது முதல் 'அனைத்தனைத் தவ்வுயிரனடைத்தோன்' என்பது வரை அடிகள் 28

4. போற்றித் திருவகவல் அடி 137 முதல் 168 வரை
'பாரிடை ஐந்தாய்' என்பது முதல் 'அருளிடவேண்டும் அம்மான் போற்றி' என்பது வரை அடிகள் 32

5. திருவெம்பாவை முழுவதும் பாடல்கள் 20

6. திருச்சதகம் (ஒவ்வொரு தலைப்பிலும் முதற் பாடல் வீதம் 10 தலைப்புக்களிலும் சேர்ந்து) பாடல்கள் 10

7. திருப்பள்ளியெழுச்சி பாடல்கள் 10

ஆகப் பாடல்கள் 40

இ. மேல் 'ஆ' பிரிவிற் குறிக்கப்பெற்ற திருச்சதகம் 10 பாடல்களுக்கும் திருப்பள்ளியெழுச்சி 10 பாடல்களுக்கும் மாறாக வேறு இருபது திருவாசகப் பாடல்களை 4 ஆண்டுகட் கொருமுறை அமைக்கத் தேர்வுக்குழுத் தலைவருக்கு உரிமை யுண்டு. மற்றைப்பகுதிகள் எப்பொழுதும் பாடமாக இருத்தல் வேண்டும்.

ஈ. பரிசுக்குரிய தேர்வு இரண்டு பிரிவுகளுடையது. ஒன்று எழுத்துத் தேர்வு; 50 கூறுகள்; இரண்டு மணி நேரம்; பரிசுத் தேர்வுக்குரிய பாடல்களில் கண்ட பொருளைப்பற்றியும், சொற்சுவை பொருட்சுவைகளைக்குறித்து வினவப்பெறும். இரண்டாவது வாய்மொழித் தேர்வு: 50 கூறுகள்; ஷை திருவாசகப் பாடல்களையும் (தேர்வுக் குழுவினர் கேட்கும் பாடல்களை) மனப்பாடமாகச் சொற்பொருள் விளங்கும் வண்ணம் ஒப்புவிக்க வேண்டும்.

உ. இப்பரிசுக்குரிய தேர்வுகளை நடத்த ஒரு தேர்வுக்குழு அமைக்கப்பெறும். சிதம்பரம் நகராட்சி மன்றத் தலைவரும் சேர்மென், முனிசிபல் கௌன்சில்/, சிதம்பரம் நகராட்சி ஆணையரும்/ கமிஷனர், முனிசிபல் கௌன்சில்/ பரிசுத் தேர்வுக்கு

விண்ணப்பிக்கும் மாணவர் கற்கும் உயர்நிலைக் கல்விக்கூடத்துத் தலைமையாசிரியர் அல்லது அவர்களால் அனுப்பப்பெறும் தமிழாசிரியர்களும் இத்தேர்வுக்குழுவின் உறுப்பினர் ஆவர். சிதம்பரம் நகராட்சி மன்றத் தலைவரே இத்தேர்வுக் குழுவின் தலைவர் ஆவர். இவரே தேர்வு முடிவுகளை வெளிப்படுத்துவர். அவர் தீர்ப்பே முடிவானது.

ஊ. பரிசுக்குப் போட்டியிடும் மாணவர் தம் விண்ணப்பங்களைத் தத்தம் தலைமையாசிரியர் வழியாக ஆண்டுதோறும் ஜூலைத் திங்கள் 31-ம் நாளுக்குள் சிதம்பர நகர மன்றத் தலைவருக்கு அனுப்புதல் வேண்டும். பரிசுக்குரிய இரண்டு தேர்வுகளும் டிசம்பர்த் திங்களில் தேர்வுக்குழுத் தலைவர் குறிப்பிடும் ஓரிடத்தில் நடைபெறும்.

எ பரிசுத் தேர்வில் முதல் கூறு பெற்றவர்க்கு முதற்பரிசு ரூ. 45/– (ரூபா நாற்பத்தைந்து), இரண்டாவது கூறு பெற்றவர்க்கு இரண்டாவது பரிசு ரூ. 35/- (ரூபா முப்பத்தைந்து), மூன்றாவது கூறு பெற்றவர்க்கு மூன்றாவது பரிசு ரூ. 30/- (ரூபா முப்பது) நான்காவது கூறு பெற்றவர்க்கு நான்காவது பரிசு ரூ. 25/-(ரூபா இருபத்தைந்து) ஆக நான்கு பரிசுகள் அளிக்கப்பெறும்.

ஏ. இறுதித் தேர்வினை எளிதில் நடத்துதற் பொருட்டு ஒவ்வொரு உயர்நிலைக் கல்விக்கூடத்திலும் விண்ணப்பித்துக் கொண்ட மாணவர்கட்கு அவ்வத் தலைமையாசிரியர் நவம்பர்த் திங்களில் முதனிலைத் தேர்வு நடத்தி அவர்களுக்குள் நல்ல தேர்ச்சி காட்டக்கூடிய மாணவர் நான்குபேரை மேல் (ஈ) பிரிவில் குறித்தவாறு டிசம்பரில் நடத்தப்பெறும் பரிசுத் தேர்வுக்கு ஒவ்வொரு உயர்நிலைக் கல்விக்கூடமும் அனுப்புதல் வேண்டும்.

ஐ. ஒருமுறை பரிசு பெற்றவர் மறுமுறை பரிசு பெறற்குரியரல்லர்.

5. இப்பரிசுகள் மார்கழித் திங்களில் திருவாதிரை விண்மீன் கூடிய நாளிலோ அல்லது வேறு ஒரு சிறந்த நாளிலோ, சிதம்பரம் நடராஜப் பெருமான் எழுந்தருளும் ஆயிரக்கால்

மண்டபத்திலோ அல்லது நகர மன்றத்துறுப்பினர் கூடும் மண்டபத்திலோ (முனிசிபல் கௌன்சில் ஹால்) பரிசு வழங்குவதற்கெனக் கூட்டிய ஒரு பொதுக்கூட்டத்தில் அளிக்கப்பெறும்.

6. பரிசுகள் அளித்தல், தேர்வு நடத்தல், ஆகிய இவற்றுக்குச் செலவாகும் தொகை அந்தந்த ஆண்டில் வரும் வட்டித் தொகைக்கு உள்ளாகவே யிருத்தல் வேண்டும். எஞ்சிய தொகை மூலதனத்தோடு சேர்க்கப்பெறல் வேண்டும்.

7. முதலீடு செய்யப்பெற்றுள்ள இம்முதற் பொருள் தவணை முடிந்து திரும்ப அளிக்கப்பெற்றதும் உயர்ந்த வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்ய வேண்டும்.

8. ஆண்டுதோறும் வரவு செலவுக் கணக்கையும், பரிசுத் தொகை பெற்றவர் விளக்கம் ஆகிய இவற்றையும், பரிசு அளிக்காத ஆண்டின் பின் 9-வது பிரிவில் கூறியவாறு தஞ்சை ஜில்லா ஆடுதுறையிலுள்ள ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப் பள்ளி மானேஜிங் கமிட்டி பிரசிடென்ட் அவர்கட்குத் தொகை அனுப்பிய விவரமும் இக்கட்டளை நிறுவியவர்களுக்கும் அவர்களுக்குப் பின்வரும் உரிமை உள்ளவர்கட்கும் அனுப்பிவர வேண்டும்.

9. இவ்வறத்தை வேறு எம்முறையிலும் பயன்படுத்துதல் கூடாது. எந்த ஆண்டிலேனும் பரிசுத் தேர்வு நடத்தாவிடில் அந்த ஆண்டுக்குரிய பரிசுத் தொகை ரூ. 135/- (ரூபாய் நூற்று முப்பத்தைந்தும்) ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மானேஜிங் கமிட்டி பிரசிடென்ட் அவர்கட்கு அனுப்பப்பெறல் வேண்டும். ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மானேஜிங் கமிட்டி பிரசிடென்ட் அவர்கள் அத்தொகையைக்கொண்டு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளியிலுள்ள நூல் நிலையத்திற்குத் தமிழ் நூல்கள் வாங்கி நூல் நிலையத்தில் சேர்த்த செய்தியை இந்த அறத்தை ஏற்படுத்தியவர்கட்கும் அவர்கட்குப்பின்வரும் உரிமை உள்ளவர்கட்கும் தெரிவித்துக்கொள்ளவேண்டும்.

குறிப்பு :—சிதம்பரம் நகராட்சி மன்றம் 17—3—1953-ல் நடந்த கூட்டத்தில் எம். சி. ஆர். 1073 எண் கொண்ட தீர்மானத்தின்படி இந்நிதியை ஏற்று நடத்த ஒப்புறுதியளித்தது. சிதம்பரம் நகரமன்றம் ஆணையர் அவர்களின் 22—4—53 தேதியிட்ட பி. 1-2554/53 எண் கொண்ட கடிதத்தால் முதற்பொருள் ரூபாய் 5000/- ஏற்றுக்கொள்ளப்பெற்றது.

Tirupanandal, 24—4—53. (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

**Registered at Tiruvadamarudhur Sub-Registrar's Office on *27—4—53* as No. *35* of *1953* book No. *4* Volume No. *44* pages *293* to *298*.**

## 7

## சிதம்பரத்தில் பல்லாண்டு விளக்கு நிதி ரூ. 5,000

திருவிசைப்பா (9-ஆம் திருமுறை) அருளிய சிவனடியார்கள் ஒன்பதின்மருள் ஒருவரும், திருவீழிமிழலையில் வாழ்ந்தவரும், விறகு விற்பதால் வரும் ஊதியத்தைக்கொண்டு நாடோறும் தில்லையில் ஒரு சிவனடியாரை உண்பித்தவரும். சிவபெருமானே நள்ளிரவில் போந்து கூழுணவு பெற்றுக்கொண்ட பேறு பெற்றவரும், திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி என்னும் தலங்களுக்குத் திருவிசைப்பா அருளியவரும், நடராஜப் பெருமானுக்குத் தவிட்டையே அமுதாக நிவேதனஞ் செய்த வரலாறு உடையவரும், தில்லையில் தேரோடும்படி **திருப்பல்லாண்டு** பாடிய சிவஞானியுமாகிய **சேந்தனாரை** நினைவு கூர்தற்பொருட்டும், அவர் அருளிய **திருப்பல்லாண்டுப்** பாசுரங்களை யாவரும் ஓதியும் கேட்டும் நல்வாழ்வு அடைதற்பொருட்டும், இச்சாசனத்தில் 3-வது பாராவில் விவரித்துள்ள தருமங்களைச் செய்தற் பொருட்டும், திருப்பனந்தாள் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்** இந்நிதி நிறுவப்பெற்றது. இது "தில்லையில் (சிதம்பரத்தில்) பல்லாண்டு விளக்குநிதி" எனப் பெயர்பெறும்.

2. இதன் சேர்க்கையில் (ஷெடியூலில்) விளக்கம் கண்டிருப்பதும், நமக்குச் சொந்தமாய் நாம் சர்வ சுதந்திரத்துடன் அனுபவித்துவருகிறதுமான, திருப்பனந்தாள் வட்டம், திருப்பனந்தாள் கிராமத்தில் அருணஜடேசுவர சுவாமி சந்நிதித் தெருவில் தென்பக்கத்தில் நம்மால் கட்டப்பெற்றுள்ள கடை வகையரு கட்டிடத்திலிருந்து கிடைக்கும் வாடகை வருமானத்தில் ஷை கட்டிடத்தைப் பழுது பார்த்தற்கும் (அதாவது ரிப்பேர் செய்தற்கும்) ஷை மனை, கடைக்கட்டிடம், இவற்றுக்கு வரிசெலுத்த வேண்டியிருப்பின் அதனைச் செலுத்துவதற்கும் ஆன செலவுத் தொகை வகையரு போக எஞ்சிய நிகர வருமானம் பின் 3-வது பாராவில் விவரித்துள்ள தருமத்தைச் செய்யப் பயன்படுத்தப்பெறும்.

3. ஷை நிகர வருமானம் (1) தில்லையில் நடராஜப் பெருமான் திருநடம்புரியும் பொன்னம்பலத்தின் தெற்கு வாயில் மேற்குப்புறச் சுவரில் துவஜஸ்தம்பத்துக் கருகில் நம்மால் 3—7—1953ல் நிறுவப்பெற்றுள்ள திருப்பல்லாண்டுப் பாசுரச் சலவைக் கற்களுக்கு முன் நாடோறும் விளக்கிடுவதற்குரிய செலவுக்கும் (2) மிச்சத் தொகை மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் நடராஜப் பெருமான் சிவமே நிலவிய தில்லைத் திருவீதியில் தேரில் திருவுலா வருங்காலத்தில் திருமுன்பு நம்மால் நியமிக்கப்பெறும் ஓதுவார்கள் திருப்பல்லாண்டு விண்ணப்பம் செய்வதற்கு ஊதியம் அளிக்கவும் பயன்படுத்தவேண்டும்.

4. இதிற்குறித்த சொத்து நம் பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலுமே இருந்துவரும்.

5. இத்தருமம் நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெறும்.

6. இவ்வருமானம் இதில் விவரித்துள்ளவாறே பயன்படுத்தப்பெறல் வேண்டும்.

7. இந்த டிரஸ்டுப் பத்திரச் சேர்க்கையில் கண்ட சொத்தின் மதிப்பு ரூ. 5000/– (ரூபா ஐயாயிரம்.)

**சேர்க்கை (ஷெடியூல்).**

தஞ்சாவூர் ரிஜிஸ்தரேஷன் டிஸ்டிரிக்ட், திருவிடைமருதூர் சப்ரிஜிஸ்தரைச் சேர்ந்த கும்பகோணம் தாலூகா திருப்பனந்தாள் வட்டம் திருப்பனந்தாள் கிராமத்தில்

ரி. சர்வே நெ. 248-1 நத்தம் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயில் சந்நிதித்தெரு தென்சரகில் வீதிக்குத் தெற்கு, சடையப்ப செட்டி வீட்டுக் கொல்லைக்கும், ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயில் வீட்டின் ஹாலுக்கும் வடக்கு, ஷை வீட்டின் திண்ணைக்கும் ஆளோடிக்கும் மேற்கு, மேலவீதிக்குக் கிழக்கு இதற்குட்பட்ட ஓட்டுவில்லைக் கட்டிடம் (ஆறு கடைகளும் ஒரு அறையும்.)

கீழ்மேல் ஜாதியடி 104

தென்வடல் மேற்புறம் ஜாதியடி 5

ஷை கீழ்ப்புறம் ஜாதியடி 9 - 1/4

திருப்பனந்தாள்,
14—10—1953.
(Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

**Registered at Tiruvadamarudur Sub-Registrar's Office on** *20-10-53* **as** *1953* **book No.** *1* **Volume No.** *1041*, **pages** *480-481*.

## 8

## சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு, சிவபுராணம் சலவைக்கல் பதிப்பு, திருவெம்பாவை எழுத்து, தேர்ச்சீலைகள் தேர்க்கொட்டகை, ஒலிபெருக்கி வகையரு ரூ. 14,500.

—oo—

## 9

## தில்லையில் (சிதம்பரத்தில்) இராஜராஜ அபய குலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி—கட்டிடங்கள் ரூ. 16,000

சிவபாத சேகரன் என்ற சிறப்புப் பெயர் பூண்டவரும் அருண்மொழித் தேவர் என்ற இயற்பெயரினரும், தில்லைச்

சிற்றம்பலத்துக்கு நிபந்தங்கள் பல அளித்து வழிபட்டதன் பயனாகத் தில்லைவாழ் அந்தணரால் இராசராசன் என்று பட்டம் சூட்டப்பெற்றவரும், 'திருவாரூர்த் தியாகேசர் பதம் பணிந்து செங்கோலோச்சி அலகில் புகழ்பெறு ராஜராஜ அபயகுல சேகரன்' என்று திருமுறை கண்ட புராணத்தில் குறிக்கப் பெற்றவரும், 'தஞ்சைத் தளிக்குளத்தார் தக்களூரார்' என்று திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியருளிய தஞ்சைத் தளிக் குளத்தைப் பெரிய கற்றளியாக எடுப்பித்து, அதற்கு 'இராச ராசேச்சுரம்' என்று பெயரிட்டவரும், திருமுறைகள் தில்லைக் கூத்தப்பிரான் திருக்கோயிலில் இருந்ததை நம்பியாண்டார் நம்பி வாயிலாக அறிந்து அவற்றை வெளிப்படுத்தி நம்பியைக் கொண்டு திருமுறைகளாக வகுத்த சிவபக்திச் செல்வரும், தஞ்சை இராசராசேச்சுரத்தில் மூவர் திருமேனிகளையும் எழுந் தருளுவித்துப் பூசித்தவரும், அத்திருக்கோயிலில் முறையாக நாள்தோறும் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய 48 ஓதுவார் களை நியமித்தவரும்

"வேங்கை நாடும், கங்க பாடியும்
தடிகை பாடியும், நுளம்ப பாடியும்
குடமலை நாடும், கொல்லமும், கலிங்கமும்,
முரட்டொழிற் சிங்களர் ஈழமண் டலமும்.
இரட்ட பாடி ஏழரை யிலக்கமும்,
முந்நீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமும்
திண்டிறல் வென்றித் தண்டாற்கொண்ட
... ... ... ... ... ... ... ... ... ... ...
கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர்"

என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்றவரும், 985 முதல் 1014 வரை அரசு செலுத்தியவருமான முதலாம் இராசராச சோழன், திருமுறைகளைத் தில்லையில் தொகுத்து முறைப்படுத் திய சிவ புண்ணியச் செயலை நினைவுகூர்தற்பொருட்டும், திருமுறையெடுத்த தில்லையில் (சிதம்பரத்தில்) அத்திருமுறை களை நாடோறும் விண்ணப்பிக்கச் செய்து திருமுறைகளைப்

பரப்புதற்பொருட்டும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது, "தில்லையில் (சிதம்பரத்தில்) ராஜராஜ அபயகுலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி" எனப் பெயர்பெறும்.

2. (அ) இதன் சேர்க்கையில் (ஷெடியூலில்) விளக்கம் கண்டிருப்பதும் நமக்குச் சொந்தமாய் நாம் சர்வசுதந்திரத்துடன் அனுபவித்து வருவதுமான திருப்பனந்தாள் வட்டம் திருப்பனந்தாள் கிராமத்தில் உள்ள வீடு கடைகள் உள்பட 15 கட்டிடங்களினின்று வரக்கூடிய வாடகை வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்குத் தொகை, பின் மூன்ருவது பாராவில் விவரித்துள்ளவாறு தில்லையில் திருப்பதியம் விண்ணப்பம் செய்வோர்க்கு ஊதியம் அளிப்பதற்குப் பயன்படுத்தப்பெறும்.

(ஆ) ஷெ செலவு போக எஞ்சியுள்ள (அதாவது வாடகை வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு) தொகையிலிருந்து தில்லைத் திருக்கோயில் கிழக்குச் சந்நிதி கோபுரத்தில் தெற்குப் பக்கத்தில் குடவரையில் சிவ சிவ ஒலி மண்டபத்தில் நம்மால் நிறுவப்பெற்றுள்ள சிவ சிவ ஒலிபெருக்கியின் பொருட்டு ஏற்படக்கூடிய (லைசென்ஸ், மின் கட்டணம், ரிப்பேர் முதலிய) எல்லாச் செலவுகளுக்கும் வேண்டிய தொகை செலவிடப்பெறும். எஞ்சியுள்ள தொகைகள் ஷெ கட்டிடங்கள் கடைகள் இவற்றைப் பழுதுபார்ப்பதற்கும், ஷெ மனை கட்டிடங்கள், கடைகள் இவற்றிற்கு வரி செலுத்தவேண்டியிருப்பின் செலுத்தவும், தேவையானல் விருத்தியாம்சம் செய்வதற்கும் செலவிடப்பெறும். இன்னும் எஞ்சியுள்ள தொகைகள், ஒலிபெருக்கியைப் புதுப்பிப்பதற்கு மூலதனமாக (**Reserve Fund**) சேர்த்து வைக்கப்பெறும்.

3. (அ) தில்லையில் (சிதம்பரத்தில்) நம்மால் நியமிக்கப்பெறும் ஓதுவார் ஒருவர் நாடோறும் தில்லைக்கூத்தப்பெருமான் திருமுன்னிலையிலும், தில்லைத் திருக்கோயில் கிழக்குக் கோபுரத்தில் தெற்குப் பக்கத்தின் குடவரையில் சிவ சிவ ஒலி மண்டபத்தில் நம்மால் நிறுவப்பெற்றுள்ள சிவ சிவ ஒலிபெருக்கி

யிலும், காலையிலும், மாலையிலும் தேவாரத் திருமுறைகளை ஓதுதல வேண்டும். அன்றியும் காலையில் மாணிக்கவாசகர் அருளிய திருப்பள்ளியெழுச்சியும், மாலையில் சேந்தனுர் அருளிய திருபல்லாண்டும் ஓதுதல் வேண்டும். மார்கழி மாசத்தில் திருவாதிரைத் திருவிழா நாட்களில் திருவெம்பாவை ஓதுதல் வேண்டும். ஒவ்வொரு வேளையிலும் ஒரு மணி நேரத்துக்குக் குறையாது சிவவொலி பெருக்கும் திருப்பணியை அவ்வோதுவார் புரிதல் வேண்டும்.

(ஆ) தேவார ஓதுவார்க்கு மாசம் ஒன்றுக்கு ரூ. 30/-- (ரூபா முப்பது) வீதம் சம்பளம் அளிக்கப்பெறும். வாடகை வருமானத்துக்கு ஏற்ப இவ்வூதியம் குறைக்கவும் கூட்டவும் பெறும்.

(இ) தேவாரம் விண்ணப்பிக்கும் ஓதுவாரை நியமிக்கவும், நீக்கவும் நமக்கும் நமக்குப்பின் வரும் உரிமையுள்ளவர்களுக்குமே உரிமையுண்டு.

4. இதிற் குறித்த மனையும் வீடுகளும் கடைகளும் நம் பேரிலும், நமக்குப்பின் வரும் உரிமையுள்ளவர்கள் பேரிலும் சுவாதீனத்திலும், அனுபவத்திலும், பரிபாலனத்திலும் இருந்து வரும்.

5. இத்தருமம் நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெற்றுவரும்.

6. மேலே விளக்கம் பெற்றுள்ள செலவினங்கட்கன்றி வேறு எவற்றுக்கும் இவ்வருமானம் பயன்படுத்தப்பெற மாட்டாது.

7. இதிற் குறித்த வீடு கடைகளினின்று ஆண்டுதோறும் வரக்கூடிய உத்தேச வாடகை வருமானம் ரூ. 800/- இந்தச் சொத்துக்களின் உத்தேச மதிப்பு ரூ. 16 000.

## சேர்க்கை (ஷெடியூல்)

தஞ்சாவூர் ரிஜிஸ்ட்ரேஷன் டிஸ்டிரிக்ட்டு திருவிடைமருதூர் சப்ரிஜிஸ்தரைச் சேர்ந்த கும்பகோணம் தாலூகா திருப்பனந்தாள் வட்டம் திருப்பனந்தாள் கிராமத்தில்

1. ரி. சர்வே. நெ. 264-22A நத்தம். மேலவீதிக்கு மேற்கு, நம்முடைய தோட்டத்திற்குக் கிழக்கு, நம்முடைய தான மாடிக்கடைக் கட்டிடத்திற்கும் சந்துக்கும் தெற்கு, போலீஸ் ஸ்டேஷன் கட்டிடத்திற்கும் தோட்டத்திற்கும் வடக்கு, இதற்குட்பட்டுள்ள கீழ்மேல் ஜாதியடி 179, தென்வடல் ஜாதியடி 51-ல் வீடு 2-ம் ஷை திண்ணையில் கடைகள் 3-ம் ஆக 5

2. ரி சர்வே. நெ. 248-1 நத்தம். மேலவீதி கீழ்ச்சரகில் வீதிக்குக் கிழக்கு, நம்முடைய வீட்டுக் கொல்லைக்கு மேற்கு, தெற்கு, வடக்கு இதற்குட்பட்டுள்ள கீழ்மேல் ஜாதியடி 56-1/2 தென்வடல் ஜாதியடி 32-1/2-ல் வீடுகள் 2-ம், திண்ணையில் இருக்கப்பட்ட கடையுட்பட 2

3. ரி. சர்வே. நெ. 248-1 நத்தம். ஷை மேல வீதி கீழ்ச்சரகில் வீதிக்குக் கிழக்கு, நம்முடைய சந்நிதி வீடு மேல்புறம் சந்துக்கு மேற்கு, நம்முடைய வீட்டுக்குத் தெற்கு, சடையப்ப செட்டியார் கடைக்கும், கோவில் கட்டிடத்திற்கும் வடக்கு, இதற்குட்பட்டுள்ள கீழ்மேல் ஜாதியடி 58, தென்வடல் ஜாதியடி 15-ல் மாடிக் கடைக் கட்டிடம் பின்புறம் புழக்கடை உள்பட 1

4. ரி. சர்வே. நெ. 248-1 நத்தம். ஷை மேலவீதி கீழ்ச்சரகில் வீதிக்குக் கிழக்கு, கோவில் வீட்டுக் கொல்லைக்கு மேற்கு, கோவிந்தசெட்டி வீட்டுப் புழக்கடைக்குத் தெற்கு, வேம்பு அம்மாள் வீட்டுக்கு வடக்கு, இதற்குட்பட்டுள்ள கீழ்மேல் ஜாதியடி 100, தென்வடல் ஜாதியடி 22-ல் ஓட்டு வீடு புழக்கடை உள்பட 1

5. ரி. சர்வே. நெ. 248-1 நத்தம் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி சந்நிதித் தெருவில் தெருவுக்கு வடக்கு, ஷை கோவில் வீட்டுக்கும் புழக்கடைக்கும் நம்முடைய வீட்டுப் புழக்கடைக்கும் தெற்கு, கிழக்கு, நம்முடைய கல்லூரிக்கட்டிட காம்பவுண்டுக்கு மேற்கு, இதற்குட்

பட்டுள்ள கீழ்மேல் ஜாதியடி 134, தென்வடல் ஜாதியடி 182-ல் வீடுகள் 4, புழக்கடை உள்பட 4

6. ரி. சர்வே. நெ. 248-1 நத்தம். ஷை சந்நிதித் தெருவில் தெருவுக்குத் தெற்கு, டி. எஸ் துரைசாமி பிள்ளை வீடு புழக்கடைக்கு வடக்கு ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோவில் வீடு புழக்கடைக்குக் கிழக்கு, மேற்கு. இதற்குட்பட்டுள்ள கீழ்மேல் ஜாதியதி 59, தென்வடல் ஜாதியடி 148-ல் ஓட்டு வீடுகள் 2 கொல்லை வால்வீச்சு உள்பட 2

Tirupanandal }
11—1—1954 } *(Sd.) Kasivasi Arulnandhi Tambiran*

---

**Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on** *11—1—1954* **as No.** *74* **of** *1954,* **Book No.** *1,* **Volume No** *1050* **pages** *138* **to** *141.*

## 10

## சிதம்பரத்தில் (தில்லையில்) பெரியபுராணப் பிரசங்க நிதி ரூபா 7000

அருண்மொழித் தேவர் என்னும் இயற்பெயரினரும், குன்றத்தூரில் சேக்கிழார் குடியில் அவதரித்தவரும், அநபாய சோழன் எனப்பெறும் இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய முதல் மந்திரியாயிருந்து அம்மன்னனால் உத்தம சோழப் பல்லவன் என்ற பட்டப்பெயர் தரப்பெற்றவரும், தில்லைவாழந்தணரே முதலாகச் சீர்படைத்த தொல்லையதாம் திருத்தொண்டத் தொகையடியார் பதங்களைப் போற்றி ஒல்லையவர் புராண கதை உலகறிய விரித்துரைத்தற்குத் தில்லையம்பலவர் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக்கொடுக்க அதனையே முதலிலும் இடையிலும் கடையிலும் வைத்து 4286 (4253) செய்யுட்கள் கொண்ட (12-ம் திருமுறையாகிய) பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தைத் தில்லையில் பத்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடிய கவிவலவரும், அரசன் வேண்டுகோட்படி சித்திரை ஆதிரைநாள்

தொடங்கி எதிராமாண்டு சித்திரை ஆதிரைவரையில் தாமே புராணக் காதை விரிவுரை நடாத்தித் 'தொண்டர்சீர் பரவுவார்' என்ற சிறப்புப்பெயர் பெற்றவரும், வைகாசிப் பூசத்தில் சிவகதி மேவியவரும் ஆகிய **சேக்கிழார் சுவாமிகளை** நினைவுகூர்ந்து அவர் அருளிய பெரியபுராணத்திற்கண்ட "அளவிலாப் பெருமைய ராகிய அளவிலா அடியார் புகழை" ஆண்டுதோறும் தில்லையில் (சிதம்பரத்தில்) சொற்பொழிவு வாயிலாகப் பரப்புதற் பொருட்டு இச்சேமவைப்பு நிறுவப்பெற்றது. இது "தில்லையில் (சிதம்பரத்தில்) பெரியபுராணப் பிரசங்கநிதி" எனப் பெறும். இந்நிதி திருப்பனந்தாள் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்** நிறுவப்பெற்றது.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 7000/- (ரூபாய் ஏழாயிரம்). இது ஆண்டொன்றுக்கு ரூபாய் 100/-க்கு ரூ. 3 வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்றது. (3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் சி ஏ. 137066–ரூ. 5000/- சி ஏ. 137030–ரூ. 2000/- ஆக ரூ. 7000/-). இந்நிதி நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெறும்.

3. இச்சேம வைப்பினின்று பெறக்கூடிய வட்டித் தொகை ரூ. 210/- இதிலிருந்து பெரியபுராணப் பிரசங்கம் செய்வார்க்கு ஊதியம் அளிக்க ரூ. 180/- செலவிடப்பெறும். எஞ்சிய தொகை இத்தருமத்தை நடத்தப் பயன்படுத்தப் பெறும்.

4. பெரியபுராணப் பிரசங்கம் செய்யக் கட்டுப்பாடுகளாவன:

(அ) ஆண்டுதோறும் வைகாசிப் பூசத்திற்கு முன்னும் பின்னுமாகத் தொடர்ந்து உசிதம்போல் 4½ நாட்கள் காலையிலும் மாலையிலும் நம்மால் நியமிக்கப்பெறும் சைவ சீலமுள்ள பழுத்த தமிழ்ப் புலவர்களால் பெரியபுராணத்தில் ஒன்பது பிரசங்கங்கள் சிதம்பரத்தில் (தில்லையில்) நடத்தப்பெறும்.

(ஆ) ஷ புலவர்கள் பல்கலைக்கழகத்து வித்துவான் அல்லது புலவர் தேர்வில் வெற்றி பெற்றவராகவும் அல்லது பி.ஏ., பி.ஓ.எல்., முதலிய பட்டதாரிகளாகவும், நாவன்மையுள்ளவராகவும், திருமுறை பயின்று சைவசித்தாந்த சாத்திரப் பயிற்சி பெற்றுச் சைவ நல்லொழுக்கம் உடையவராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடையவர்களே ஆண்டுதோறும் நம்மாலும் நமக்குப் பின் உரிமை உள்ளவர்களாலும் பெரியபுராணப் பிரசங்கங்கள் செய்ய நியமிக்கப் பெறுவர்.

(இ) சொற்பெருக்கு ஒன்றுக்கு ரூ. 20/- (ரூபாய் இருபது) வீதம் சொற்பணியாளருக்கு ஊதியம் அளிக்கப் பெறும். இவ்வூதியம் சொற்பெருக்குச் சன்மானம், பிரயாணச் செலவு, நித்தியப்படிச் செலவு முதலிய எல்லாச் செலவுகளையும் உட்கொண்டது.

(ஈ) எந்த நாளேனும் சொற்பணியாளர் எதிர்பாராத காரணங்களால் வராமற் போயின் நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் நியமிக்கப்பெறும் பிறர் ஒருவர் அக் கடமையை ஆற்றி அச்சொற்பொழிவு அல்லது சொற்பொழிவுகளுக்குரிய ஊதியத்தைப் பெறக்கடவர்.

## உ சொற்பெருக்குத் திட்டம்

**முதல் நாள் பிற்பகல் முதற் சொற்பெருக்கு—திருமலைச் சருக்கம்**

திருமலைச் சிறப்பு 40 செய்யுள்; திருநாட்டுச் சிறப்பு 35 செ; திருவாரூர்ச் சிறப்பு 50 செ; திருக்கூட்டச் சிறப்பு 11 செ; தடுத்தாட்கொண்ட புராணம் 203 செ; ஆகச் செய்யுள் 339.

**2-ம் நாள் முற்பகல் 2-ம் சொற்பெருக்கு—தில்லைவாழந்தணச் சருக்கம்**

தில்லைவாழந்தணர் புராணம் 10 செ; திருநீலகண்டர் 44 செ; இயற்பகையார் 36 செ; இளையான்குடிமாறர் 27 செ; மெய்ப்பொருள் நாயனார் 24 செ; விறன்மிண்டர் 11 செ; அமர்நீதி 49 செ; ஆகச் செய்யுள் 201.

**2-ம் நாள் பிற்பகல் 3-ம் சொற்பெருக்கு—இலைமலிந்த சருக்கம்**

எறிபத்தர் 57 செ; ஏனாதிநாதர் 42 செ; கண்ணப்பர் 186 செ; குங்கிலியக்கலயர் 35 செ; மானக்கஞ்சாறர் 37 செ; அரிவாட்டாயர் 23 செ; ஆனாயர் 42 செ; ஆகச்செய்யுள் 422.

**3-ம் நாள் முற்பகல் 4-ம் சொற்பெருக்கு—மும்மையாலுலகாண்ட சருக்கம்**

மூர்த்தியார் 49 செ; முருகனார் 14 செ; உருத்திரபசுபதியார் 10 செ; திருநாளைப்போவார் 37 செ; திருக்குறிப்புத் தொண்டர் 128 செ; சண்டேசுரர் 60 செ; ஆகச் செய்யுள் 298.

**3-ம் நாள் பிற்பகல் 5-ம் சொற்பெருக்கு—திருநின்ற சருக்கம்**

திருநாவுக்கரசர் 429 செ; குலச்சிறையார் 11 செ; பெருமிழலைக் குறும்பர் 11 செ; காரைக்காலம்மையார் 66 செ; அப்பூதி 45 செ; திருநீலநக்கர் 38 செ; நமிநந்தி 33 செ; ஆகச்செய்யுள் 633.

**4-ம் நாள் முற்பகல் 6-ம் சொற்பெருக்கு—வம்பறுவரிவண்டுச் சருக்கம்**

திருஞானசம்பந்தர் புராணம் 1256 செய்யுள்.

**4-ம் நாள் பிற்பகல் 7-ம் சொற்பெருக்கு—வம்பறுவரிவண்டுச் சருக்கம்**

ஏயர்கோன் கலிக்காமர் 409 செ; திருமூலர் 28 செ; தண்டியடிகள் 26 செ; மூர்க்கர் 12 செ; சோமாசிமாறர் 6 செ; ஆகச்செய்யுட்கள் 481.

**5-ம் நாள் முற்பகல் 8-ம் சொற்பெருக்கு-வார்கொண்டவனமுலையாள் சருக்கம்**

சாக்கியர் 18 செ. சிறப்புலி 6 செ. சிறுத்தொண்டர் 88 செ. கழறிற்றறிவார் 175 செ. கணநாதர் 7 செ. கூற்றுவர் 9 செ. ஆகச் செய்யுள் 303.

**5-ம் நாள் பிற்பகல் 9-ம் சொற்பெருக்கு-பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்**

பொய்யடிமையில்லாத புலவர் புராணம் 3 செ. புகழ்ச் சோழர் 41 செ. நரசிங்கமுனையரையர் 9 செ. அதிபத்தர் 20 செ. கலிக்கம்பர் 10 செ. கலியர் 17 செ. சத்தியார் 7 செ. ஐயடிகள் காடவர்கோன் 9 செ. **கறைக்கண்டன் சருக்கம்**. கணம்புல்லர் 9 செ. காரி 5 செ. நின்றசீர் நெடுமாறன் 10 செ. வாயிலார் 10 செ. முனையடுவார் 7 செ. **கடல் சூழ்ந்த சருக்கம்**. கழற்சிங்கர் 13 செ. இடங்கழி 11 செ. செருத்துணை 7 செ. புகழ்த்துணை 7 செ. கோட்புலி 13 செ. **பத்தராய்ப்பணிவார் சருக்கம்**. பத்தராய்ப்பணிவார் 8 செ. பரமனையேபாடுவார் 2 செ. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் 1 செ. திருவாரூர்ப் பிறந்தார் 2 செ முப்போதும் திருமேனி தீண்டுவார் 3 செ. முழுநீறு பூசிய முனிவர் 6 செ. அப்பாலும் அடிசார்ந்தார் 2 செ. **மன்னியசீர்ச் சருக்கம்**. பூசலார் 18 செ. மங்கையற்கரசியார் 3 செ. நேசர் 5 செ. கோச்செங்கட்சோழர் 18 செ. திருநீலகண்டயாழ்ப்பாணர் 12 செ. சடையர் 1 செ. இசைஞானியார் 1 செ. **வெள்ளானைச் சருக்கம்** 53 செ. ஆகச் செய்யுள் 343.

ஊ. இதில் மேலே வகுத்துள்ளவாறு 9 சொற்பொழிவுகள் நடத்தப்பெறும். சொற்பணியாளர் ஷை சருக்கங்களில் உள்ள பொருளைத் தெளிவாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வகையில் கேட்போர் மனங் கொள்ளுமாறு பத்திப் பெருக்குடன் சொற்பெருக்காற்ற வேண்டும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப் பெறமாட்டாது. இந்நிதி நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலேயும் இருந்துவரும்.

Tirupanandal,
28—2—1954. *(Sd.) Kasivasi Arulnandi Tambiran*

---

**Registered at Tiruvadamarudur Sub-Registrar's Office on *2—3—54* as No. *14* of *1954* Book No. *4*, Volume No. *45* pages *72* to *75*.**

## 11

## சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் அன்னம்பாலிப்பு நிலம் பெறுமானம் ரூ. 1,50,000

கற்றுங் கெரியோம்பிக் கலியை வாராமே செற்றார், சிற்றம்பலமேய செல்வன் கழல் ஏத்தும் செல்வமே செல்வமாக வுடையவர்' என்று சம்பந்தராலும், 'சிட்டர், திருவுடையந்தணர்' என்று அப்பராலும், 'முட்டாத முச்சந்தி மூவாயிரவர்' எனச் சுந்தரராலும், 'செல்வ மூவாயிரம் செழுஞ்சோதி யந்தணர், தெய்வ வாய்மொழியார், வேதவென்றி மாறாத மூவாயிரவர், ஓவா முத்தீயஞ்சு வேள்வி யாறங்க நான்மறையோர், இளையாள் மொழி இன்தமிழால் ஏத்தும் மறைவல நாவலர்கள்' என்று 9-ம் திருமுறையிலும், 'அங்கணர் கோயில் உள்ளா அகம்படித் தொண்டு செய்வார், உறுவது நீற்றின் செல்வம் எனக்கொளும் உள்ளமிக்கார், பெறுவது சிவன்பால் அன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார், தம்மையே தமக்கொப்பான நிலைமையால் தலைமை சார்ந்தார், தென்தமிழ்ப் பயனுயுள்ள திருத்தண்டத் தொகை முன்பாட அன்று சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடியெடுத்துக் கொடுக்கப்பெற்ற பெருமையுடையவர்' என்ற 12-ம் திருமுறையிலும் புகழப்பெற்றவரும், இமயமலையில் அந்தர் வேதியர் நடந்த யாகத்திற்குப் பிரமனால் அழைத்துச் செல்லப்பெற்றுத் திரும்பிக்கொண்டு வந்துவிடப் பெற்றவர்களுள் ஒருவர் குறைந்தனராக 'மூவாயிரவருள் யாமும் ஒருவர்' என்று நடராஜப் பெருமானால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற சிறப்பு வாய்ந்தவர்களும் ஆகிய தில்லை வாழந்தணர்களில், அவ்வந்நாட்களில் தில்லைக் கூத்தப் பெருமானைப் பூஜை செய்யும் தீக்ஷிதர்களுள் 14 (பதினான்கு) பேருக்கு நாடோறும் நண்பகலில் ஒரு வேளை சிதம்பரத்தில் அன்னம் பாலித்தற் பொருட்டுத் **திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களால் இத்தருமம் நிறுவப்பெற்றது. இது 'தில்லையில் (சிதம்பரத்தில்) தில்லை வாழந்தணர் அன்னம்பாலிப்பு' எனப் பெயர்பெறும்.

2. இத்தருமத்தை நிறுவியவர்கள் தம் பேரில் பட்டா மிராசுடனும் சர்வ சுதந்திரத்துடனும் அநுபவித்து வருவதும் இதன் சேர்க்கையில் விவரிக்கப்பெற்றுள்ளதுமான கும்பகோணம் தாலுக்கா உக்கரை வட்டம் தத்துவாஞ்சேரி கிராமம் நன்செய், புன்செய், நத்தம் வகையறு 199 ஏக்கர், 37½ செண்டு நிலமும், ஷை கிராமத்திலுள்ள நமது கட்டிடங்களும், சமுதாய விகிதமும் இத்தருமத்துக்கென ஒதுக்கப்பெற்றுள்ளன. இந்தச் சொத்துக்களின் ஆண்டு வருமானத்தில் சர்க்கார் கிஸ்தி, சிப்பந்திச் செலவு, கிராம சமுதாயம், மராமத்துச் செலவு வகையறு போக எஞ்சிய நிகர வருமானத்தில் ஆண்டுதோறும் ரூ. 3600 (ரூபா மூவாயிரத்தறுநூறு) மட்டும் பின் 3-வது பிரிவில் விவரித்துள்ளவாறு தில்லைவாழந்தணர் அன்னம் பாலிப்பு நடத்தப் பயன்படுத்தப்பெறும்.

3. (அ) இந்தத் தருமத்தை நிறுவியவர்களாலும் பின் உரிமையுள்ளவர்களாலும் மாதந்தோறும் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி சிதம்பரத்தில் நாடோறும் தில்லைவாழந்தணர்களுக்குள் தில்லைக் கூத்தப்பெருமானுக்கு அணுக்கராக அகம்படித்தொண்டு செய்யும் (தில்லைக் கூத்தப் பெருமானைப் பூசை செய்யும்) உரிமையுடைய முறையாளர்களுள் 16 (பதினாறு) பேருக்கு மட்டும் அன்னம் பாலிக்கப்பெறும் (பூசை முறை நபர் 13, கட்டளை தீக்ஷிதர் 1, மணியகாரர் 1, சமையல்காரர் 1 ஆக நபர் 16).

(ஆ) மாசம் ஒன்றுக்கு இவ்வன்னம்பாலிப்புக்கெனத் தற்காலிகமாக ரூ. 300 (ரூபா முன்னூறு) செலவு செய்யப்பெறும். கால விலைக்கு ஏற்ப இவ்வன்னம் பாலிப்புச் செலவு வகையறு கூட்டவும் குறைக்கவும் பெறும்.

(இ) மாதந்தோறும் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவில் கண்டவண்ணம் சாமான்களோ அல்லது அச்சாமான்களின் காலவிலை ரொக்கமாகவோ சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோவில் மானேஜிங் கமிட்டிச் செயலாளர் (Secretary) அவர்களுக்கு அளிக்கப்பெறும்.

(ஈ) சாமான்கள் அளிப்பின் அச்சாமான்களைக்கொண்டும், ரொக்கமாக அளிக்கப்பெறின் அத்தொகையைக் கொண்டும் ஸ்ரீ சபாநாயகர் கோயில் மானேஜிங் கமிட்டி செக்ரடரி அவர்கள் திட்ட ஜாப்தாவில் கண்டவண்ணம் சாமான்களை வாங்கி அன்னம்பாலிப்பு நிகழ்த்தவேண்டும்.

4. (1) தில்லை நடராசப் பெருமானுக்கு அணுக்கராகப் பூசை செய்யும் தீக்ஷிதர்களுள் இரண்டுபேருக்கு ஆண்டு தோறும் காசி யாத்திரை உதவியளிக்கப்பெறும். தில்லையி லிருந்து காசி போக வர நபர் ஒன்றுக்கு ரூ. 100 (ரூபா நூறு) வீதம், மொத்தம் ரூ. 200 (ரூபா இருநூறு) அளிக்கப்பெறும். வருவாய்க்குத் தக்க தொகை கூட்டவும் குறைக்கவும்பெறும்.

(2) காசி யாத்திரை உதவிபெற விரும்புபவர் ஆண்டு தோறும் ஐப்பசி மாதம் 30-ந் தேதிக்குள் மனுச் செய்து கொள்ளவேண்டும். காசி யாத்திரை உதவி பெறுபவர் அந்த ஆண்டு கார்த்திகை மாதம் 30-ந் தேதிக்குள் காசி யாத்திரை முடிக்கவேண்டும்.

(3) காசி யாத்திரை முடித்துத் திரும்புகையில் பிர யாகையினின்று தம்மால் கொண்டுவரக்கூடிய அளவு கங்கா தீர்த்தத்தைக் கொணர்ந்து தில்லை நடராசப் பெருமானுக்கு **மார்கழித் திருவாதிரையில்** அபிஷேகம் செய்து, அங்ஙனம் அபிஷேகம் செய்த விவரத்தை நமக்கும் நமக்குப்பின் உரிமை யுள்ளவர்களுக்கும் தெரிவிக்கவேண்டும்.

5. (1) மேல் 3, 4 பிரிவுகளில் குறித்தவாறு செலவு செய்தபிறகு எஞ்சிய வருமானத் தொகைகள் எல்லாம் இத் தருமத்தை நிறுவியவர்களாலும் பின் உரிமையுள்ளவர்களா லும் தம் விருப்பம்போல் இதர தருமங்கள் செய்வதற்குப் பயன்படுத்தச் சர்வ உரிமைகளும் உண்டு.

(2) இத்தருமத்திற்கென ஒதுக்கப்பெற்ற நிலபுலங் கள் இதை நிறுவியவர்கள்பேரிலும், பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும், சுவாதீனத்திலும், பரிபாலனத்திலும் இருந்துவரும். இச்சொத்தின் மதிப்பு ரூ. 1,50,000.

**ஆடக மதுரை அரசே போற்றி !**
**தென் றில்லை மன்றினுள் ஆடி போற்றி !!**

தஞ்சாவூர் ரிஜிஸ்தரேஷன் டிஸ்டிரிக்டு திருவிடைமருதூர் சப் ரிஜிஸ்தரைச் சேர்ந்த கும்பகோணம் தாலூகா உக்கரை வட்டம், தத்துவாஞ்சேரி கிராமத்தில், திருப்பனந்தாள் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்கட்குச் சொந்தமான நன்செய் ஏ. 171 செ. 26½, புன்செய் ஏ. 26 செ. 24, நத்தம் ஏ. 1 செ. 51, தரிசு வகையரு ஏ. 0 செ. 36 ஆக நன்செய், புன்செய், நத்தம் வகையரு 199 ஏக்கர் 37½ செண்டு நிலமும் ஷை கிராமத்திலுள்ள கிட்டங்கி முதலிய கட்டிடங்களும், புறம்போக்கிலுள்ள 2 C மரங்களும், ஷை கிராமத்திய சமுதாய வீதம் நன்செய், புன்செய் நமது பாத்தியமும் இதர கோவில் குளங்களும் நத்தம் முதலியவைகளில் நாம் இதுவரை அனுபவித்துவந்த நமது பாத்தியங்களும் இந்த எண்டௌமெண்டுக்கு உட்பட்டது.

திருப்பனந்தாள், 15—7—1954. (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

**Registered at Tiruvidamarudhur Sub-Registrar's Office. on** *16—7—1954* **as No.** *1316* **of** *1954.* **Book Nc.** *1.* **Volume No.** *1030.* **Pages** *320* **to** *326.*

## 12

## சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்க நிதி ரூ. 7,000

அருள்வாதவூரர் சொல்ல அம்பலவர் தாம் எழுதியதும், தொல்லையிரும் பிறவி சூழும்தளை நீக்கி அல்லலறுத்து ஆனந்தமாக்குவதும், கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ்சாற்றிலே தேன் கலந்து பால் கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதும், ஒருகால் ஓதின் கருங்கல் மனமும் கரைந்துருகக் கண்கள் தொடுமணற்கேணியிற் சுரந்து நீர்பாய அன்பராக்குவதும், 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்ற பழமொழி

பெற்றுள்ளதும், 'திருவாசகம் என்னும் தேன்' என்று சிறப்பிக்கப் பெறுவதும், 8-ந் திருமுறையாக விளங்குவதுமான திருவாசகத்தை 'ஓதாத நாவும், செவியுறக் கேட்டுருகாத நெஞ்சமும் ஏன் படைத்தார் இவ்வுலகவரே' என்ற மொழியை மாற்றித் தில்லையில் சொற்பொழிவு வாயிலாகத் திருவாசகத்தைப் பேசுவித்தும் கேட்பித்தும் நற்பயன் எய்துவித்தற் பொருட்டு ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது 'சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்க நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ 7000/- (ரூபாய் ஏழாயிரம்). இது ஆண்டொன்றுக்கு ரூ. 100-க்கு ரூ. 3 (ரூபாய் மூன்று) வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் நெ. சிஏ. 139632 ரூ. 5000 ; சிஏ. 138864 ரூ. 2,000, ஆக ரூ. 7,000. இந்நிதி நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெறும்.

3. இச்சேம வைப்பினின்று பெறக்கூடிய வட்டித் தொகை ரூ. 210. இதிலிருந்து திருவாசகப் பிரசங்கம் செய்வார்க்குச் சன்மானம் அளிக்க ரூ. 175 செலவிடப்பெறும். எஞ்சிய தொகை இத்தருமத்தை நடத்தப் பயன்படுத்தப் பெறும்.

4. திருவாசகப் பிரசங்கம் செய்யக் கட்டுப்பாடுகளாவன :

(அ) 'அறிவாற் சிவனே' என்று போற்றப்பெறும் மாணிக்கவாசக சுவாமிகள் தெய்வீகம் பெற்ற திருநாளாகிய ஆனி மகத்துக்கு முன்னும் பின்னுமாக உசிதம்போல் 5 நாட்கள் மாலையில் நம்மால் நியமிக்கப்பெறும் சைவ சீலமுள்ள பழுத்த தமிழ்ப் புலவர்களால் திருவாசகத்தில் ஐந்து பிரசங்கங்கள் ஆண்டுதோறும் தில்லையில் (சிதம்பரத்தில்) நிகழ்த்தப் பெறும்.

(ஆ) ஷை புலவர்கள் பல்கலைக் கழகத்து வித்துவான் அல்லது புலவர் தேர்வில் வெற்றிபெற்றவராகவும், அல்லது பி. ஏ., பி. ஓ. எல். முதலிய பட்டதாரிகளாகவும், நாவன்மையும் திருமுறை பயின்று சைவசித்தாந்த சாத்திரப் பயிற்சி பெற்றுச் சைவ நல்லொழுக்கம் உடையவராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடையவர்களே ஆண்டுதோறும் நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் திருவாசகப் பிரசங்கங்கள் செய்ய நியமிக்கப்பெறுவர்.

(இ) சொற்பெருக்கு ஒன்றுக்கு ரூ. 35 (ரூபாய் முப்பத்தைந்து) வீதம் சொற்பணியாளருக்கு ஊதியம் அளிக்கப்பெறும். இவ்வூதியம் சொற்பெருக்குச் சன்மானம், பிரயாணச் செலவு, நித்தியப்படிச்செலவு முதலிய எல்லாச் செலவுகளையும் உட்கொண்டது.

(ஈ) சொற்பணியாளர் தாம் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கத்தைச் சொற்பொழிவாற்றிய நாளே சிறு கட்டுரை வடிவத்தில் பிரசுரிக்கும் உரிமையையும் சேர்த்துத் தருதல் வேண்டும்.

(உ) எந்த நாளேனும் சொற்பணியாளர் எதிர்பாராத காரணங்களால் வராமற்போயின் நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் நியமிக்கப்பெறும் பிறர் ஒருவர் அக்கடமையை ஆற்றி அச்சொற்பொழிவுகளுக்குரிய ஊதியத்தைப் பெறக்கடவர். இவரும் மேல் (ஈ) பிரிவில் குறித்தவாறு சொற்பொழிவின் சுருக்கத்தைச் சிறு கட்டுரை வடிவத்தில் எழுதித் தரக்கடவர்.

(ஊ) சொற்பெருக்குத் திட்டம் :—

முதல் நாட் சொற்பெருக்கு நான்கு அகவல்கள்

1. சிவபுராணம் — சிவனது அநாதி முறைமையான பழமை வரி 95
2. கீர்த்தித் திருவகவல் — சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை வரி 146

3. திருவண்டப் பகுதி — சிவனது தூல சூக்குமத்தை வியந்தது வரி 182
4. போற்றித் திருவகவல்— சகத்தின் உற்பத்தி வரி 225

## 2-ம் நாட் சொற்பெருக்கு—திருச்சதகம்

5. திருச்சதகம் — பத்திவைராக்கிய விசித்திரம் பாட்டு 100

## 3-ம் நாட் சொற்பெருக்கு—தில்லைத் திருவாசகம்

| நிரல் எண் | பதிக எண் | பதிகப் பெயர் | பாடற் றொகை |
|---|---|---|---|
| 1. | 9 | திருப்பொற்சுண்ணம் - ஆனந்தமனோலயம் | 20 |
| 2. | 10 | திருக்கோத்தும்பி – சிவனோடைக்கியம் | 20. |
| 3. | 11 | திருத்தெள்ளேணம் – சிவனோடடைவு | 20 |
| 4. | 12 | திருச்சாழல் – சிவனுடைய காருண்யம் | 20 |
| 5. | 13 | திருப்பூவல்லி – மாயாவிசயம் நீக்குதல் | 20 |
| 6. | 14 | திருவுந்தியார் – ஞான வெற்றி | 20 |
| 7. | 15 | திருத்தோணோக்கம் – பிரபஞ்ச சுத்தி | 14 |
| 8. | 16 | திருப்பொன்னூசல் – அருட்சுத்தி | 9 |
| 9. | 17 | அன்னைப்பத்து – ஆத்துமபூரணம் | 10 |
| 10. | 18 | குயிற்பத்து – ஆத்தும இரக்கம் | 10 |
| 11. | 19 | திருத்தசாங்கம் – அடிமைகொண்ட முறைமை | 10 |
| 12. | 21 | கோயில் மூத்ததிருப்பதிகம் - அநாதியாகிய சற்காரியம் | 10 |
| 13. | 22 | கோயில் திருப்பதிகம் – அனுபோக இலக்கணம் | 10 |
| 14. | 31 | கண்டபத்து – நிருத்த தரிசனம் | 10 |
| 15. | 35 | அச்சப்பத்து – ஆனந்தம் உறுதல் | 10 |
| 16. | 40 | குலாப்பத்து – அநுபவம் இடையீடு படாமை | 10 |
| 17: | 44 | எண்ணப் பதிகம் – ஒழியா இன்பத்து உவகை | 6 |

| | | | |
|---|---|---|---|
| 18. | 45 | யாத்திரைப்பத்து – அனுபவாதீதம் உரைத்தல் | 10 |
| 19. | 49 | திருப்படையாட்சி – சிவோபாதி ஒழிதல் | 8 |
| 20. | 46 | திருப்படையெழுச்சி – பிரபஞ்சப்போர் | 2 |
| 21. | 50 | ஆனந்தமாலை – சிவானுபவ விருப்பம் | 7 |
| 22. | 51 | அச்சோப்பதிகம் – அனுபவ வழியறியாமை | 9 |

ஆகப்பதிகங்கள் 22-க்குத் திருவாசகம் 265

4-ம் நாட் சொற்பொழிவு—திருப்பெருந்துறைத் திருவாசகம்

| | | | |
|---|---|---|---|
| 1. | 20 | திருப்பள்ளியெழுச்சி – திரோதானசுத்தி | 10 |
| 2. | 23 | செத்திலாப்பத்து – சிவானந்தம் அளவறுக் கொணாமை | 10 |
| 3. | 24 | அடைக்கலப்பத்து – பக்குவ நிண்ணயம் | 10 |
| 4. | 25 | ஆசைப்பத்து – ஆத்தும இலக்கணம் | 10 |
| 5. | 26 | அதிசயப்பத்து – முத்தி இலக்கணம் | 10 |
| 6. | 27 | புணர்ச்சிப்பத்து – அத்துவித இலக்கணம் | 10 |
| 7. | 28 | வாழாப்பத்து – முத்தி உபாயம் | 10 |
| 8. | 29 | அருட்பத்து – மகாமாயாசுத்தி | 10 |
| 9. | 32 | பிரார்த்தனைப்பத்து – சதாமுத்தி | 11 |
| 10. | 33 | குழைத்தபத்து – ஆத்துமநிவேதனம் | 10 |
| 11. | 34 | உயிருண்ணிப்பத்து – சிவானந்தம் மேலிடுதல் | 10 |
| 12. | 36 | திருப்பாண்டிப்பதிகம் – சிவானந்தவிளைவு | 10 |
| 13. | 38 | திருவேசறவு – சுட்டறிவு ஒழித்தல் | 10 |
| 14. | 41 | அற்புதப்பத்து – அனுபவம் ஆற்றாமை | 10 |
| 15. | 42 | சென்னிப்பத்து – சிவவிளைவு | 10 |
| 16. | 43 | திருவார்த்தை – அறிவித்து அன்புறுதல் | 10 |
| 17. | 47 | திருவெண்பா – அணைந்தோர்தன்மை | 11 |
| 18. | 48 | பண்டாயநான்மறை – அனுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல் | 7 |

ஆகப்பதிகம் 18-க்குத் திருவாசகம் 179

5-ம் சொற்பெருக்கு—பிறதலத் திருவாசகம்

| நிரல் எண் | பதிக எண் | பதிகம் | தலம் | பாடற் றொகை |
|---|---|---|---|---|
| 1. | 6 | நீத்தல் விண்ணப்பம் – பிரபஞ்ச வைராக்கியம் | உத்தரகோச மங்கை | 50 |
| 2. | 7 | திருவெம்பாவை – சத்தியை வியந்தது | திருவண்ணுமலை | 20 |
| 3. | 30 | திருக்கழுக்குன்றப் பதிகம் – குருதரிசனம் | திருக்கழுக்குன்றம் | 7 |
| 4. | 39 | திருப்புலம்பல் – சிவானந்த முதிர்வு | திருவாரூர் | 3 |
| 5. | 37 | பிடித்த பத்து – முத்திக்கலப்புரைத்தல் | திருத்தோணிபுரம் | 10 |
| 6. | 8 | திருவம்மானை – ஆனந்தக்களிப்பு | திருவண்ணுமலை | 20 |
| | | ஆகப் பதிகங்கள் 6-க்குத் திருவாசகம் | | 110 |

ஏ. மேலே குறித்துள்ளவாறு ஐந்து சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறும். சொற்பொழிவாளர் ஷெ திட்டத்தில் கண்ட திருவாசகப்பொருளைத் தெளிவாகச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் வகையில் கேட்போர் மனங்கொள்ளப் பக்திப்பெருக்குடன் சொற்பெருக்காற்ற வேண்டும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப் பெறமாட்டாது. இந்நிதி நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலேயும் இருந்துவரும்.

திருப்பனந்தாள்,
15—8—1954.

(Sd) *Kasivasi Arulnandi Tambiran*

---

**Registered at Tiruvadamarudhur Sub-Registrar's Office on** *20—8—1954* **as No.** *37* **of** *1954*. **Book No. 4. Volume** *45*. **Pages** *112* **to** *115*.

## 13

**சிதம்பரம் நடராஜா சபையில் கீழ்புறம் மேற்புறம் அருகால் கதவு வெள்ளித்தகடு நகாஸ் வேலை செய்ய வெள்ளிக் கிரயம் கூலி வகையரு ரூ. 7,000 ; ஷை அருகாலுக்கு ரூ. 4,000 ஆக மொத்தம் நன்கொடை ரூ. 11,000**



## வாழ்த்து

*மல்குக வேத வேள்வி ; வழங்குக சுரந்து வானம் ;*
*பல்குக வளங்கள் எங்கும் ; பரவுக அறங்கள் ; இன்பம்*
*நல்குக உயிர்கட் கெல்லாம் ; நான்மறைச் சைவம் ஓங்கி*
*புல்குக உலக மெல்லாம் ; புரவலன் செங்கோல் வாழ்க.*

**உலகெலாம் சிவநாமமே பரவுவதாகுக !**



உ

செந்திலாண்டவன் துணை

**திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவராக எழுந்தருளியிருக்கும்**

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி**

**அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள் இசைத்தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொதுமக்களின் அனுகூலத்துக்காகவும் மனமுவந்து அமைத்திருக்கும் பேரறக் கட்டளைகள்.

| தொடர் எண் | தரும விவரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 1. | சிவஞானசித்தியார் உபந்நியாசக் கட்டளை அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ... | 15,000 |
| 2. | கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த ... | 11,500 |
| 3. | திருவாங்கூர் மகாராஜா தேவாரப் பரிசு ... | 5,000 |
| 4, | சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு, கொச்சி. ... | 5,000 |
| 5. | மூவர் தேவாரப் பரிசு சீகாழி, திருவாரூர் திருவையாறு, திருப்பனந்தாள். ஆடுதுறை... | 10,000 |
| 6. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தப் போதகாசிரியர் நியமிக்க (62 பார்க்க) ... | 60,000 |
| 7. | அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க ... | 30,000 |
| 8. | திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவ நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 9. | இசைத் தமிழ்க் கல்விக்கு நிலப்பெறுமானம். | 1,00,000 |
| 10, | திருப்பனந்தாளில் கால்நடை வைத்திய சாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் நிலப் பெறுமானம் ... | 20,000 |

| | | |
|---|---|---|
| 11. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ... | 10,000 |
| 12. | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ... | 10,000 |
| 13. | திருநள்ளாற்றில் ஆவணிமூல அன்னதானம். | 3,000 |
| 14. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் ... | 17,000 |
| 15. | திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர் உணவு நிதி நிலப்பெறுமானம் ... | 1,00,000 |
| 16. | திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலப்பெறுமானம் ... | 66,000 |
| 17. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் கேதார கட்டம் ... | 2,900 |
| 18. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் ... | 3,300 |
| 19. | கும்பகோணத்தில் மணிக்கூண்டு ... | 25,000 |
| 20. | தஞ்சையில் காசநோய் வைத்தியசாலை ... | 29,500 |
| 21. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ... | 9,000 |
| 22. | மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு ... | 5,000 |
| 23. | தருமை ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, மாயூரம் ... | 5,000 |
| 24. | சென்னை விவேகானந்தா கல்லூரியில் ராஜாஜி சைவசித்தாந்தக் கட்டளை ... | 10,000 |
| 25. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சர். எஸ். ராதாகிருஷ்ணன் சைவசித்தாந்தக் கட்டளை | 20,000 |
| 26. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, ஸ்ரீவைகுண்டம் ... | 5,000 |
| 27. | மதுரைத் திருமலை நாயக்கர் தேவாரப் பரிசு | 10,000 |

| | | |
|---|---|---|
| 28. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகளுக்கு நிலப்பெறுமானம் ... | 1,00,000 |
| 29. | ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் (ஜனவரித் திங்கள் 30-ம் நாள்) ... | 5,000 |
| 30. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 31. | டாக்டர் சுவாமிநாத அய்யர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை ... | 3,500 |
| 32. | குடந்தையில் காந்தியடிகள் பசுப் பரிசு ... | 1,000 |
| 33. | காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகார நிதி ... | 3,000 |
| 34. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை கட்டிடம் ... | 10,000 |
| 35. | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் ... | 5,400 |
| 36. | விஷ்ணுபுரத்தில் மகாத்மா காந்தி நினைவு ஹைஸ்கூல் படிப்பக நிதி ... | 1,000 |
| 37. | குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 38. | திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 39. | திருப்பனந்தாளில் அப்பூதிஅடிகள் நினைவு தண்ணீர்ப் பந்தல் தர்மம் ... | 3,500 |
| 40. | ஸ்ரீவைகுண்டத்தில் படிப்பக நிதி ... | 3,500 |
| 41. | சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவு நிதி ... | 35,000 |
| 42. | சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் ... | 12,000 |

| | | |
|---|---|---|
| 43. | இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் ... | 3,500 |
| 44. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் ... | 26,025 |
| 45. | பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை ... | 5,000 |
| 46. | அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி ... | 3,500 |
| 47. | ஸ்ரீ காசி கேதாரீசுவரர் கோயிலில் ஸ்ரீ குமாரசாமி அன்னதானம் நவராத்திரி விஜயதசமி நாட்களில் ... | 5,000 |
| 48. | ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் நினைவுத் தேவாரப் பரிசு ... | 3,500 |
| 49. | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயிலில் மின்சார தீபம்போட ... | 7,500 |
| 50. | காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு ... | 5,000 |
| 51. | திருவஞ்சைக்களத்தில் ஆடிச்சுவாதியில் சேரமான் பெருமாள் நினைவு அன்னதானம் | 7,000 |
| 52. | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் இரண்டாண்டு உதவி நிதி ... | 23,500 |
| 53. | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்திற்கு நான்கு ஆண்டு மூலதனம் ... | 28,000 |
| 54. | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் திருச்செந்தூர் மூன்றுவது உதவி மூலதனம் ... | 20,500 |
| 55. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடமும் நிலமும் ... | 15,000 |
| 56. | மாளவியாஜி பெயரால் கல்கத்தா, டெல்லி, அலகபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவசித்தாந்த உபந்நியாசக் கட்டளை ... | 5,000 |

| | | |
|---|---|---|
| 57. | செந்திலாண்டவன் அன்னதானம் சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் (ஆவணி மூலத்தில்) நிலப்பெறுமானம் ... | 60,000 |
| 58. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ ... | 2,275 |
| 59. | ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப் பள்ளி நிறுவ ... | 45,000 |
| 60. | ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசியாத்திரை நிதி ... | 5,000 |
| 61. | பனைசைக் கல்லூரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு ... | 5,000 |
| 62. | (6) ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது ... | 16,000 |
| 63. | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் மதுரை இரண்டாண்டு உதவி மூலதனம் ... | 14,000 |
| 64. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மாணவிகள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக்கிரயம் ... | 14,000 |
| 65. | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் வகையரு — திருநெல்வேலி இரண்டாண்டு உதவி மூலதனம் ... | 10,000 |
| 66. | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி வகையரு கும்பகோணம் இரண்டாண்டு உதவி மூலதனம் ... | 14,000 |
| 67. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளிக்கு நன்கொடை ... | 15,000 |
| 68. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை கட்டிடம் உள்பட ... | 27,975 |

| | | |
|---|---|---|
| 69. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம் ... | 10,000 |
| 70. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை ... | 8,000 |
| 71. | ஸ்ரீ காசியில் தை மாதத்தில் இந்தியக் குடியரசு தினம் அன்னதானம் ... | 10,000 |
| 72. | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 73. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் மடத்திற்குப் பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலப் பெறுமானம் ... | 50,000 |
| 74. | சண்டேசுவர நாயனுர் நினைவு தண்ணீர்ப் பந்தல் தருமம் திருவாப்பாடி ... | 3,500 |
| 75. | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி ... | 7,000 |
| 76. | திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் தேவாரப் பரிசு நிதி ... | 5,000 |
| 77. | சென்னையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் திருக்குறள் பதிப்பு நிதி ... | 35,000 |
| 78. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் மங்கையர்க்கரசியார் நினைவுப் பரிசு நிதி ... | 3,500 |
| 79. | கும்பகோணம் தாலூகா மேலச் சூரியமூலை கண்டியன் பழவாற்றின்மீது பாலம் கட்ட ... | 8,390 |
| 80. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் நிதி ... | 3,500 |

| | | |
|---|---|---|
| 81. | பழுத்த தமிழ்ப் புலவர் காசியாத்திரை நிதி செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள் ... | 5,000 |
| 82. | திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் சித்திரைப் பரணியில் ... | 7,000 |
| 83. | திருவஞ்சைக் களத்தில் ஸ்ரீ சேரமான், ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் நினைவு வாசக சாலை நிறுவ ... | 5,000 |
| 84. | திருநாரையூரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி ... | 35,000 |
| 85. | இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சனமார்க்க சங்க நூல் நிலைய நிதி ... | 5,000 |
| 86. | லால்குடியில் ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச் சம்பள நிதி ... | 15,000 |
| 87. | அவிநாசியில் முந்நூல் அணியும் கலியாண நிதி திருப்பனந்தாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் நினைவுப் பரிசு நிதி ... | 5,000 |
| 88. | குடந்தையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு ... | 5,000 |
| 89. | திருப்பூந்துருத்தியில் அப்பர் நினைவு அன்னம்பாலிப்பு-சித்திரைச் சதயத்தில் ... | 15,000 |
| 90. | திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகள் நினைவுத் தமிழ்ப் பரிசு ... | 5,000 |
| 91. | ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்தர் நினைவுப் பரிசு ஸ்ரீவைகுண்டம் ... | 3,500 |
| 92. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் இராமேசுவரம் ... | 3,500 |
| 93. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் சென்னபுரி அன்னதான சமாஜம் சென்னை (வைகாசி அமரபக்ஷம்) திருதியை ... | 5,000 |

| | | |
|---|---|---|
| 94. | காசியில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு அன்னதானம் (ஆனி மகத்தில்) ... | 5,000 |
| 95. | திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ... | 5,000 |
| 96. | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ ... | 5,000 |
| 97. | திருநாரையூரில் ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ ... | 7,000 |
| 98. | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு ... | 5,000 |
| 99. | தஞ்சை, கலைக்கூடத்திற்கு நன்கொடை ... | 5,000 |
| 100. | மணிக்குடியில் கடலூர்க்கலயர் புனற் பந்தர் நிதி ... | 3,500 |
| 101. | காசியில் ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞான சம்பந்த சுவாமிகள் நினைவு மாசி மாத அன்னதானம் ... | 5,000 |
| 102. | திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் திருவள்ளுவர் நினைவுப் பரிசு ... | 5,000 |
| 103. | ஸ்ரீ காசியில் பங்குனி மாதத்தில் கமலை ஞானப்பிரகாசர் நினைவு அன்னம்பாலிப்பு... | 5,000 |
| 104. | திருச்செந்தூரில் ஐக்கிய வேளாள சங்கப் படிப்பக நிதி ... | 5,000 |
| 105. | காசியில் சித்திரை மாதத்தில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 106. | ஆடுதுறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி நிதி ... | 40,000 |
| 107. | செந்திலாண்டவன் திருவருள் பாலிப்பு நிதி நிலப்பெறுமானம் ... | 50,000 |
| 108. | திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூஜை நிதி ... | 12,000 |

| | | |
|---|---|---|
| 109. | ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு – திருச்செந்தூர் ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளிகளில் ... | 7,000 |
| 110. | ஸ்ரீ காசியில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு கார்த்திகை மாதத்தில் ... | 7,000 |
| 111. | சென்னைக் கல்லூரிகளில் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் நினைவு சிவபோக சாரம் பரிசு நிதி ... | 5,000 |
| 112. | தஞ்சையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு சேமவைப்பு ... | 5,000 |
| 113. | மதுரையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5,000 |
| 114. | திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல் தரும நிதி தத்துவாஞ்சேரி ... | 3,500 |
| 115. | காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு மாசி–மிருகசீருஷம் ... | 7,000 |
| 116. | திருக்காளத்தியில் கண்ணப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 117. | ஸ்ரீ காசியில் சுந்தரர் நினைவு ஆடிமாத அன்னம் பாலிப்பு சேமவைப்பு ... | 7,000 |
| 118. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சகலகலா வல்லி மாலைப் பரிசு—அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாயூரம் ... | 1,000 |
| 119. | **சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு** ... | 5,000 |
| 120. | வெள்ளியம்பலவாண முனிவர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு—திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் ... | 3,500 |

| | | |
|---|---|---|
| 121. | காசியில் ஜாபள்ளி ஜமீன்தார் அன்னம் பாலிப்பு சேமவைப்பு ... | 6,000 |
| 122. | மதுரையில் கமலை வெள்ளியம்பலவாணர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு ... | 5,000 |
| 123. | திருவாதவூரில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ... | 5,000 |
| 124. | சீகாழியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பால் நிதி ... | 3,500 |
| 125. | திருவண்ணாமலையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5,000 |
| 126. | கல்கத்தா சர்வகலாசாலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் தமிழ்ப் பரிசு நிதி ... | 3,500 |
| 127. | **தில்லையில் பல்லாண்டு விளக்கு நிதி (கட்டிடம்)** | 5,000 |
| 128. | ஸ்ரீ காசியில் அரிமர்த்தன பாண்டியன் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 129. | ஸ்ரீ காசியில் திருமூலர் நினைவு ஐப்பசித் திங்கள் அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 130. | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பல வாண முனிவர் முதுமொழிமேல் வைப்புப் பரிசு சேமவைப்பு ... | 5,000 |
| 131. | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் கொள்ளிடத் தீர்த்த விழா நிதி (கட்டிடம்) ... | 12,000 |
| 132. | இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ பொம்மராஜு ஸ்ரீ மகாராஜுலிங்காரு நினைவு அன்னதானம் ... | 5,000 |
| 133. | கும்பகோணத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ வெங்கடப்பெருமாள் ராஜுலிங்காரு நினைவு அன்னதானம் (மாசி மகத்தில்) ... | 3,500 |

134. திருவண்ணமலை (பராசக்தியம்மன் சந்நிதியில்) திருவெம்பாவை சலவைக்கல் பதிப்பு... 2,500

135. **சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு சிவபுராணம் சலவைக்கல் பதிப்பு, திருவெம்பாவை எழுத்து தேர்ச்சிலைகள், தேர்க்கொட்டகை, ஒலிபெருக்கி வகையரு** ... 14,500

136. (கும்பகோணம்) திருப்புறம்பயம் சாட்சிநாத சுவாமி தேவஸ்தானம் திருப்பணி, மின்விளக்கு, தேர்ச்சிலை வகையரு ... 7,700

137. சுவாமிமலை, திருச்செந்தூர், மதுரை, திருத்தணிகை, மைலாப்பூர், திருவண்ணமலை, திருநெல்வேலி, கச்சியேகம்பம், கச்சிக்குமரகோட்டம், திருப்பனந்தாள் அருணசடேசுவரர் தேவஸ்தானம், கும்பகோணம், திருப்பரங்குன்றம், திருக்கழுக்குன்றம், வைத்தீஸ்வரன்கோவில், சீகாழி, திருக்கடவூர், திருவையாறு, தருமபுரம், திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருவாதவூர், விருத்தாசலம் ஆகிய தலங்களில் "**சிவ சிவ**" ஒளிவளர் விளக்கு அமைக்க ... 8,510

138. **தில்லையில் (சிதம்பரத்தில்) இராஜ ராஜ அபய குலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி (கட்டிடங்கள்)** ... 16,000

139. திருப்பனந்தாளில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி ஆதிகுமரகுருபர சுவாமிகள் மகேசுவர பூசை நிதி(வைகாசி அமரபக்ஷம் திருதியை) நிலப் பெறுமானம் ... 100,000

140. காஞ்சிபுரத்தில் ஸ்கந்த ஷஷ்டி விழாவில் கந்தபுராண பிரசங்க நிதி ... 3,500

| | | |
|---|---|---|
| 141. | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூசை நிதி நிலப் பெறுமானம் ... | 2,00,000 |
| 142. | காசியில் காளத்தி ராஜா நினைவுநாள் ஹஸ்தி பசுபதீச்சுர பூசை நிதி ... | 5,000 |
| 143. | நாகர்கோவிலில் ஸ்ரீ தாணுமாலயப் பெருமான் நூல்நிலையப் படிப்பக நிதி ... | 3,500 |
| 144. | காசியில் ஞானசம்சந்தர் நினைவு வைகாசித் திங்கள் அன்னம்பாலிப்பு ... | 7,000 |
| 145. | திருவாரூரில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பல வாணமுனிவர் முதுமொழிமேல் வைப்புப் பரிசு நிதி ... | 3,500 |
| 146. | திருப்பனந்தாளில் ஸ்ரீ செந்திலாண்டவன் அருளிப்பாடு நிதி நிலப்பெறுமானம் ... | 2,00,000 |
| 147. | திருவிடைமருதூரில் தைப்பூச அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 148. | தில்லையில் பெரியபுராணப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 149. | ஸ்ரீ காசியில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ஆனிமாதம்முழுதும்... | 7,000 |
| 150. | இராமேசுவரத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ஆடி மாதம் முழுதும் ... | 3,500 |
| 151. | மதுரையில் திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 152. | ஸ்ரீ காசியில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு நிதி புரட்டாசி மாதத்தில் ... | 7,000 |
| 153. | காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு ... | 3,500 |

154. காசியில் கோச்செங்கட் சோழர் நினைவு அன்னம்பாலிப்பு மாசி மாதம் ... 3,500
155. மதுரையில் பெரியபுராணப் பிரசங்க நிதி 7,000
156. மதுரையில் கந்தபுராணப் பிரசங்க நிதி ... 3,500
157. **சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் அன்னம் பாலிப்பு நிலப்பெறுமானம்** ... 1,50,000
158. கல்கத்தாபல்கலைக்கழகத்தில்ஸ்ரீகாசிவாசி சுவாமிநாத சுவாமிகள் நினைவு தமிழ்ப் பரிசு நிதி ... 3,500
159. **சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்க நிதி** ... 7,000
160. திருக்கழுக்குன்றத்தில் மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு ஆனி மகம் ... 5.000
161. சீகாழியில் சட்டைநாதர் புழுகு நெய் சாத்து நிதி ... 3,500
162. மதுரையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ குமரகுருபர சுவாமி கள் நினைவுப் பசு நிதி ... 3,500
163. ஸ்ரீ காசியில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு (பங்குனி மாதத் தில்) ... 5,000
164. ஸ்ரீ காசியில் இசைஞானியார் நினைவு அன்னம் பாலிப்பு (சித்திரை மாதத்தில்) ... 5,000
165. ஸ்ரீகாசியில் திருநீலகண்ட நாயனர் நினைவு அன்னம்பாலிப்பு (வைகாசி மாதத்தில்) ... 3,000
166. ஸ்ரீ காசியில் நன்பாட்டுப் புலவர் நினைவு ஆனி மாச அன்னம் பாலிப்பு ... 3,000
167. இராமேச்சுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு ... 3,500
168. ஸ்ரீ காசியில் மும்மையால் உலகாண்ட மூர்த்தி நினைவு ஆடிமாச அன்னம்பாலிப்பு... 3,000

| | | |
|---|---|---|
| 169. | திருவாரூரில் மனுநீதிச் சோழர் நினைவுப் பரிசு நிதி ... | 3,500 |
| 170. | ஸ்ரீ காசியில் குங்கிலியக் கலயர் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு ... | 3,000 |
| 171. | திருப்பனந்தாளில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு பிரசவ விடுதி கட்டுவதற்கு நன்கொடை ... | 5,000 |
| 172. | ஸ்ரீ காசியில் உருத்திர பசுபதியார் நினைவு புரட்டாசி மாத அன்னம் பாலிப்பு ... | 3,000 |
| 173. | ஸ்ரீ காசியில் நெடுமாறநாயனார் நினைவு ஐப்பசி மாத அன்னம் பாலிப்பு ... | 3,000 |
| 174. | ஸ்ரீ காசியில் ஆனாயநாயனார் நினைவு கார்த்திகை மாச அன்னம் பாலிப்பு ... | 3,000 |
| 175. | இராமேசுவரத்தில் கார்வேட்நகர் ஸ்ரீ பொம்மராஜு நினைவு அன்னம் பாலிப்பு ... | 6,000 |
| 176. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி இராமலிங்கசுவாமிகள் நினைவு மாசிமாத அன்னம்பாலிப்பு நிதி ... | 3,500 |
| 177. | வடதிருவாலங்காட்டில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 178. | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 179. | காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாச்சாரியர் நினைவுப் பசுப் பரிசு நிதி ... | 3,500 |
| 180. | காஞ்சிபுரத்தில் திருக்கச்சியேகம்பன் உருத்திராக்கத் தேவார நிதி ... | 50,000 |
| 181. | சுவாமிமலையில் அப்பர் நினைவு புனற் பந்தர் நிதி ... | 3,500 |

182. திருப்பனந்தாள் சிவசிவ நால்நடை வைத்திய சாலைக்குப் புதிய கட்டிடம் கட்டுவதற்கு நன்கொடை ... 3,000

183. சிவன் கோயில்களில் தேவாரப் பாசுரங்களைப் பிற தெய்வப் பாடல்களோடு கொண்ட கல்லெழுத்துப் பதிப்பு — மதுரை, திருக்கழுக்குன்றம், மைலாப்பூர் திருச்செந்தூர், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருவாரூர், திருக்குற்றாலம், திருப்பனந்தாள், திருப்புன்கூர், சீகாழி, வேதாரண்யம், திருவையாறு, அவிநாசி, திருவெண்ணெய்நல்லூர், திருவதிகை, திருமருகல், சுவாமிமலை, வைத்தீஸ்வரன் கோயில், திருச்சிராப்பள்ளி, திருவோத்தூர், திருவிடைக்கழி, சிதம்பரம், திருவண்ணமலை, வடதிருமுல்லைவாயில், பழநி ... 22,400

184. மதுரைச் சொக்கலிங்கம் சந்தன மெய்ப்பூச்சு நிதி ... 7,000

185. சிதம்பரம் நடராஜா சபையில் கீழ்புறம், மேற்புறம் அருகால் கதவு வெள்ளித்தகடு நகாஸ் வேலை செய்ய வெள்ளிக் கிரயம் கூலி உள்பட ரூ. 7,000; ஷ அருகாலுக்கு ரூ. 4,000 ஆக மொத்தம் நன்கொடை ... 11,000

186. மதுரையில் தேவார நிதி ... 50,000

187. திருச்சிராப்பள்ளியில் தாயுமானவர் காவிரித் திருமஞ்சன நிதி ... 7,000

188. திருப்பனந்தாளில் குடிதண்ணீர் வசதிக்கு நான்கு குழாய்கள் நிறுவ நன்கொடை ... 4,500

| | | |
|---|---|---|
| 189. | இராமேசுவரத்தில் காளத்தி ராஜா ஸ்ரீ வெங்கடப்ப நாயுடு பகதூர்வாரு நினைவு அன்னதானம் ... | 10.000 |
| 190. | இராமேசுவரத்தில் கார்வேட் நகர ராஜா ஸ்ரீ பொம்ம ராஜு பகதூர் அவர்களின் நினைவு அன்னதானம் ... | 12,000 |
| 191. | ஸ்ரீ காசியில் காளத்தி ராஜா ஸ்ரீ வெங் கட்ட நாயனிம்வாரு நினைவு அன்ன தானம் ... | 8,500 |
| 192. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு சகலகலாவல்லிமாலைப் பரிசு ... | 2,000 |
| 193. | கும்பகோணத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ வெங்கடப்பெருமாள் ராஜலிங்காரு நினைவு அன்னதானம் ... | 12,000 |
| 194. | திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் நினைவு புனற்பந்தர் நிதி ... | 3.500 |

திருச்சிற்றம்பலம்

---

இம்பீரியல் அச்சகம், பெரியகம்மாளத்தெரு, திருச்சி—

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 28 | கந்தர் கலிவெண்பா—மூலம் மட்டும் ... | 0 | 1 |
| 29 | நீதிநெறி விளக்கம்—ஆங்கிலமும், ஹிந்தியும் ... | 0 | 8 |
| 30 | சகலகலாவல்லி மாலை—ஆங்கிலமும், ஹிந்தியும் கூடியது ... ... | 0 | 1 |
| 31 | சிவஞான சித்தியார்—ஆங்கிலமும், ஹிந்தியும் கூடியது ... ... | 5 | 0 |
| 32 | ஷை ஹிந்தி மட்டும் ... ... | 1 | 0 |
| 33 | திருக்குறள்—அறத்துப்பால்—ஹிந்தி மொழி பெயர்ப்பு ... ... | 1 | 8 |
| 34 | ஷை பொருட்பால் ஷை ... ... | 2 | 8 |
| 35 | ஷை காமத்துப்பால் ஷை ... ... | 1 | 0 |
| | ஷை மூன்று புத்தகங்களும் சேர்ந்து ... | 4 | 0 |
| 36 | திருக்குறள்—கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L., அவர்கள் குறிப்புரையுடன் ... | 0 | 12 |
| 37 | முதுமொழிமேல் வைப்பு—ஸ்ரீ வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் ... | 0 | 7 |
| 38 | திருவுசாத்தானக் கல்வெட்டுகள் ... ... | 0 | 6 |
| 39 | திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்—மதுரைக் கலம்பகம்—நீதிநெறி விளக்கம்—மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை—மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 | 12 |
| 40 | திருவாரூர் நான்மணிமாலை—முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 | 0 |
| 41 | சிதம்பர மும்மணிக்கோவை—சிதம்பரச் செய்யுட்கோவை—தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ... ... | 1 | 0 |
| 42 | பண்டார மும்மணிக்கோவை—காசிக் கலம்பகம்—சகலகலாவல்லி மாலை ... ... | 0 | 8 |
| 43 | தமிழிசைப் பாக்கள் ... ... | 0 | 8 |

**கிடைக்குமிடங்கள் :**

**1 ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்**

**2 தியாகராச விலாஸ், 53 பிள்ளையார் கோவில் தெரு திருவல்லிக்கேணி, சென்னை-5**

குறிப்பு.— ஷை விற்பனைத்தொகை "குமரகுருபரன்" பத்திரிகையைச் சாரும்.

உ

# "குமர குருபரன்"

[ தமிழ்த் திங்கள் வெளியீடு ]

ஸ்ரீவைகுண்டம்
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடாலயத்திலிருந்து
**விரோதி ஆண்டு தைத் திங்கள் முதல்**
மாதந்தோறும் வெளிவருகிறது



**இது**
**சைவசித்தாந்தம், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தம்,**
**பன்னிரு திருமுறை ஆராய்ச்சி, இலக்கியம்,**
**பிற மொழிகள், கலாசாரம் சம்பந்தமான**
**கட்டுரைகள் கொண்டது**





*நிர்வாக ஆசிரியர் :*
**T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,**
*(நிரந்தரத் தலைவர், குமரகுருபரன் சங்கம்)*
**மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம்**
**ஸ்ரீவைகுண்டம்**

வருட சந்தா ரூ 1—8—0 தனிப்பிரதி ரூ. 0—2—0

இம்பீரியல் அச்சகம், பெரியகம்மாளத்தெரு, திருச்சிராப்பள்ளி—55.